**ஏ. எஸ். ஓ. ஜி.**

291. i. கெத்சேமனே இரகசியம்; ii. சேமுவேல் பாக்கியம்; கோல்டன பிரஸ், சென்னை; iii. 1902; iv. உ. ப. 70; v. 17 × 11 செ. மீ.; vi. 0–2–0; vii. எருசலேமுக்குச் சமீபத்தில் உள்ள ஒலீவ மலையை அடுத்த பள்ளத்தாக்குக்குக் 'கெத்சேமனே' என்று பெயர். அங்கே கிறிஸ்து பெருமானுக்கு நேர்ந்த நிகழ்ச்சிகள் பற்றி உரைப்பது; ஒன்பது அதிகாரங்கள் உள. viii. 104/1902/II.

Q6 :3

292. i. **கின்னரத் தோழன்**; ii. ஈவான்ஞ் லூத்மிஷன் பிரஸ், தரங்கம்பாடி; iii. 1904; iv. செ. மூ. ப. 36; v. 21× 15 செ. மீ.; vi.........; vii. தேவாராதனையில் ஞானப்பாட்டுகளுக்கு முன்பின் வழங்கும் இராகங்களும் குருவுக்குச் சுதி காட்டும் விதமும் தேவாராதனை முறைமைக்கடுத்த இராகங்களும் அடங்கிய புத்தகம். viii. 174/1904/I.

Q6 : 3

293. i. **கிருஸ்தவ ஈகை**; ii. எம். இ. பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை; iii. 1909; iv. உ. ப. 77; v. 22 × 14 செ. மீ.; vi.....; vii. கிறிஸ்தவர் செய்ய வேண்டும் ஈகை நிலை குறித்து விளக்குவது. ஈகையைக் குறித்துச் சில வேதவசனங்களை விவரிப்பதோடு உதாரத்துவத்தின் பாக்கியம் முதலியன பற்றியும் உரைக்கின்றது. viii. 568/1909/III.

Q6 : 3

**கேரி ஐயர் முதலியோர்**

294. i. கிறிஸ்தவ முயற்சி சங்கத்து சாதன நூல் : 1-ஆம் புத்தகம்; ii. ஏ. எம். லெநாக்ஸ் பிரஸ், பசுமலை; iii. 1909; iv. உ.ப. 64; v. 13 × 11 செ. மீ.; vi.........; vii. 'கிறிஸ்தவ பக்தி முயற்சி சங்க கைவல்ய நூல்' என்றும் இதற்குப் பெயர் உண்டு. ஆறு அத்தியாயங்கள் உள்ளன. இவை ஒவ்வொன்றும் வெவ்வேறு பெரியார்களால் இயற்றப்பெற்றவை. இவற்றை இயற்றினர் கேரி ஐயர் முதலியோராவர். viii. 264/1910/I.

Q6 : 3

295. **சிறுவர்க்கேற்ற வேத சரித்திரங்கள்** : இரண்டாம் பதிப்பு; ii. ii. ஏவாங் லூத் மிஷன பிரஸ், தரங்கம்பாடி; iii. 1908; iv. உ. ப. 51 + 4; v. 17 × 12 செ. மீ.; vi.........; vii. முதற் பங்கில் பழைய ஏற்பாட்டுக் கதைகளும் இரண்டாம் பங்கில் உலக இரட்சகரைப் பற்றிய செய்திகளும் விவரிக்கப்பட்டுள்ளன. பத்துக் கற்பனைகள் முதலியன குறித்த மூன்று அனுபந்தங்கள் இதில் உள்ளன. viii. 189/1908/III.

Q6 : 3

296. i. ஞான உபதேச வினு விடை—மூன்ரும் பங்கு ; ii. எம். இ. பிரஸ், சென்னை ; iii. 1906 ; iv. உ. ப. 179 ; v. 18 × 12 செ. மீ. ; vi. ......... ; vii. கர்த்தருடைய ஜெபம், ஞானஸ்நானக் கட்டளை, கர்த்தருடைய இராப் போசனக் கட்டளை என்னும் மூன்றும் பற்றி விவரிப்பது. viii. 111/1906/I.

Q6 : 3

297. i. ஞானசீவியம் ; ii. செயிண்ட் ஜோஸப்ஸ் காலேஜ் பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. 1908 ; iv. உ.ப. 516 ; v. 18×11 செ.மீ. ; vi. ... ; vii. கிருத்துவ சமயக் கொள்கை விளக்கும் நூல். மோக்ஷத்தில் சேரத்தக்கதாக நம்முடைய ஆத்துமத்தில் இருக்கவேண்டிய இஷ்டப் பிரசாதமாகிய ஞானசீவியத்தைப் பற்றிய சில விஷயங்களை விளக்குவது. 14 பிரிவுகளாக இது உள்ளது. viii. 465/1908/III.

Q6 : 3

டேவிட் ஐயர், ஜே.

298. i. இயல் வேத—அருள்வேத ஒப்புமை விளக்கப் பொருளடக்கம்; ii. கலாரத் நாகரம் பிரஸ், சென்னை ; iii. 1902 ; iv. உ.ப. 147 ; v. 22× 15 செ.மீ. ; vi. ...... ; vii. ஒப்புமை அனுமானப் பிரமாணங்களினுல் கிருத்துவ வேத தத்துவம் விளக்குவது. இரண்டாம் பங்கில் அருள்வேதம் என்னும் கிருத்துவ மார்க்கத்தின் சிறப்புக்கள் பேசப்பட்டுள்ளன. viii. 90/1902/III.

Q6 : 3

தோம்தெயோத்தோனியு

299. i. ஞானதிகார நிருபம் ; ii. பிரிமியர் பிரஸ், சென்னை ; iii. 1902 ; iv. உ.ப. 32 ; v. 21× 14 செ.மீ. ; vi. ...... ; vii. திருமயிலே மேற்றிராசன அதிபதி பதின்மூன்ரும் சிங்கராயர் பாப்பானவர் பட்டம் பெற்ற 25-ம் வருஷ ஜூபிலி மகோற்சவத்தையும் நிகழும் தபசு கால ஒழுங்கையும் பற்றி எழுதிவிடுத்த அறிக்கை நூல். viii. 202/1902/II.

Q6 : 3

300. i. நீதிச் சொல் ; ii. அர்ச். சூசையப்பர் கல்லூரி பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. ஜூன், 1906 ; iv. உ.ப. 58 ; v. 16×10 செ.மீ. ; vi. ...... ; vii. கிருத்துவப் பாதிரியார் ஒருவரால் இயற்றபெற்றது. இந் நூல் 1683-ல் எழுதப்பட்டதாகத் தெரிய வருகின்றது என முகவுரையில் பதிப்பாசிரியர் கூறுகிருர். 12 அதிகாரங்கள் இந் நூலகத்து உள்ளன. கிருத்துவ மதத்தின் உயர்வினை எடுத்துரைப்பது. viii. 311/1906/II.

Q6 : 3

301. i. நீதி மொழிகள் ; ii. எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை ; iii. 1908 ; iv. உ.ப. 106 ; v. 12×9 செ.மீ. ; vi. . . . . . . ; vii. விவிலிய நூலிற் காணப்பெறும் நீதி மொழிகளைத் திரட்டித்தருகின்றது. 31 அதிகாரங்கள் உள்ளன. viii. 76/1908/III.

Q6 : 3

302. i. பிரதான மந்திரங்களின் வியாக்கியானம் ; ii. செயிண்ட் ஜோசப் கல்லூரி பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. 1906 ; iv. உ.ப. 507 ; v. 17×11 செ.மீ. ; vi. . . . . . . ; vii. இ∴து உபதேசிமார்களின் உபயோகத்துக்காக எழுதப்பெற்றது. அர்ச்சியசிஷ்ட சிலுவை மந்திரம், பரமண்டல மந்திரம் முதலிய பிரதான மந்திரங்களுக்குரிய வியாக்கியானங்கள் தரப்பட்டுள்ளன. பொருள் அட்டவணை நூல் இறுதியில் உள்ளது. viii. 111/1907/II.

Q6 : 3

303. i. பிரதான மந்திரங்களின் விளக்கம் : மூன்றும் பதிப்பு ; ii. ஜோசப் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. 1910; iv. உ.ப. 40 ; v. 17×11 செ.மீ. ; vi. . . . . . . ; vii. அர்ச்சியஷ்ட சிலுவை மந்திரம் முதலிய சில மந்திரங்களிலுள்ள பதங்களின் அர்த்தமும் கருத்தும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்குப் புரியும் வகையில் இயற்றப் பெற்றது. viii. 853/1910/III.

Q6 : 3

பிறெங்கிள், கர்னல்.

304. i. பரிசுத்த வழிகாட்டி ; ii. மினர்வா பிரஸ், சென்னை ; iii. 1908 ; iv. உ.ப. 7+106 ; v. 18×11 செ.மீ. ; vi. . . . . . . ; viii. 'போர் வீரரின் புஸ்தகசாலை' என்னும் வரிசையைச் சேர்ந்தது இந் நூல். கிறித்து மார்க்கத்தின் உண்மைகளை உணர்த்தும் ஒரு சிறு வழி காட்டி இது. ஆங்கில மூலத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்தவர் பிரும்வெல் பூத் என்பவராவர். 13 அதிகாரங்களாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளன. viii. 399/1908/I.

Q6 : 3

305. i. புது நன்மை ஆயத்தம் ; ii. செயிண்ட் ஜோஸப்ஸ் காலேஜ் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1906 ; iv. உ. ப. 128 ; v. 16×11 செ.மீ. ; vi. . . . . . . ; vii. புது நன்மை ஆயத்தத்திற்கு வேண்டும் காரியங்கள் பற்றி விளக்குவது. viii. 320/1906/I.

Q6 : 3

மரிய சூசை பிள்ளை, எஸ்.

306. i. திருஸ்தல தரிசனை ; ii. எஸ். மரிய சூசைபபிள்ளை செயிண்ட் ஜோஸப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. 1910 ; iv. உ.ப. 129 ; v. 16×10 செ.மீ. ; vi. . . . . ; vii. கிறிஸ்து பெருமான் வாழ்ந்த புண்ணிய பூமியாகிய

பாலஸ்தீன் நாட்டையும், பிராஞ்சு, இங்கிலாந்து, இத்தாலி முதலிய தேசங்களையும் அங்குள்ள தேவாலயங்களையும் தரிசித்து வந்தவர் இவ்வாசிரியர். இவர் சென்றுவந்த இடங்களுக்குச் செல்லும் மார்க்கங்களும் பிரயாணம் செய்யவேண்டிய விதங்களும் இன்னதென்று விவரிப்பது. பரிசுத்த தலங்களைத் தரிசித்து விசுவாசத்தில் ஸ்திரப்பட்டு தேவ ஆசீர்வாதத்தைப் பிறகு பெறவேண்டும் என்னும் நோக்கத்தோடு ஆசிரியர் இந் நூலை எழுதியுள்ளார். இந் நூலின் பொருள் அட்டவணை நூல் இறுதியில் உள்ளது. viii. 357/1910/IV.

Q6 : 3

307. i. **மனச்சாட்சி விளக்கம்** ; ii. ஈ.எல்.எம். பிரஸ், தரங்கம்பாடி; iii. 1910 ; iv. உ.ப. 179 ; v. 17×12 செ.மீ. ; vi....... ; vii. 'கிறிஸ்தவ வேதத்தின் பொருளை மனச்சாட்சிக்கு விளங்க வைத்தல்' என்பது இதன் மற்றொரு பெயர். கிறிஸ்தவப் பொருளை அறிய விரும்புவோருக்கும் அறிவிக்க விரும்புவோருக்கும் துணையாக எழுதப் பெற்றது. கிறிஸ்தவ வேதம் சொல்லும் தியானத்தின் இயல்புகளை விளக்குவது. முகவுரையில் வேத தியானம் பற்றியும் பின் முதலாம் தியானம் தொடங்கி ஏழாம் தியானம் ஈறாக ஏழு அத்தியாயங்களில் சன்மார்க்கப் பிரகரணம் முதலியன பற்றி விவரித்துள்ளார். viii. 304/1910/IV.

Q6 : 3

308. i. **மனன வசனங்கள்** ; ii. ஏ. எம். லெநாக்ஸ் ப்ரஸ், பசுமலை ; iii. 1909 ; iv. உ.ப. 12 ; v. 18×11 செ.மீ. ; vi. ....... ; vii. மனனம் செய்யத்தக்க விவிலிய வேத வசனங்கள் 120 இதில் தரப்பட்டுள்ளன. viii. 263/1910/I.

Q6 : 3

309. i. **மெய் அளவை** ; ii. எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை ; iii. 1909 ; iv. உ.ப. 16 ; v. 22×13 செ.மீ. ; vi. ...... ; vii. இயேசு கிறிஸ்துவின் உயர்வையும், சத்திய வேதத்தையும் பற்றி உரைக்கின்றது. சத்திய வேத நூல்களை வாசிக்குமாறு பிறரைத் தூண்டும் நோக்கத்தோடு இயற்றப்பெற்ற தெருப் பிரசார நூல். viii. 500/1909/II.

Q6 : 3

310. i. **லூர்து தரிசனங்கள்** ; ii. செயின்ட் ஜோசப்ஸ் காலேஜ் பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. 1907 ; iv. உ.ப. 75 ; v. 16×11 செ.மீ. ; vi. ....... ; vii. லூர்து மாதாவின் அற்புத வரலாறு பற்றிக்கூறுவது. viii. 247/1907/IV.

Q6 : 3

311. i. **வேத சத்தியங்கள்** ; ii. *அர்ச். சூசையப்பர் கல்லூரி ப்ரஸ்,* *திருச்சிறுப்பள்ளி* ; iii. 1906 ; iv. *உ.ப.* 145 ; v. 16×11 *செ.மீ.* ; vi. ...... ; vii. *மனிதனின் மோக்ஷ பாக்கியத்தை அடையத்தக்கதாக வேத சத்தியங்களை விசுவசிக்கவும், தேவ கற்பனைகளை அநுசரிக்கவும், சில வழிபாடுகளை உபயோகிக்கவும் கடமைப்பட்டிருக்கிறான் என்றும், 'அக் கடமைகளைச் இச்சிறு புஸ்தகத்தில் சுருக்கமாய் வெளிப்படுத்துவோம்' என்றும் ஆசிரியர் தொடக்கத்தில் குறித்துள்ளார். இது இரண்டு பெரும் பிரிவுகளை உடையது.* viii. 309/1906/III.

Q6 : 3

## 232·9—கிறிஸ்துவின் வாழ்க்கை

**சந்தோஷக்குட்டிக் கவிராயர், ஞான. மா.**

**312.** i. *ஏழுரைப்பா* ; ii. *சைவப் பிரகாசம் ப்ரஸ், தூத்துக்குடி* ; iii. 1909 ; iv. *செ.மூ.ப.* 12 ; v. 13×10 *செ.மீ.* ; vi. 0–0–6 ; vii. *இயேசு பெருமான் சிலுவைமேல் இருந்து உலகம் அறிய இயம்பிய ஏழு உரைகளைப் பாக்களாகப் பாடியுள்ளார்.* viii. 61/1909/IV.

Q6 : 33

313. i. **நீசவாகனம்** ; ii. *மிஜிஷன் நத்தானியல் டேவிட் ; விக்டர் பிரஸ், சென்னை* ; iii. 1904 ; iv. *செ.மூ.ப.* 62 ; v. 22×14 *செ.மீ.* ; vi. 0–12–0 ; vii. *சேசுநாதரின் திருச்சரிதையைக் கூறுவது. சேசுநாதர் பட்டபாடுகளின் மேல் அம்மானை என்றும் இந் நூல் பெயர் பெறும். சேசுநாதரின் சரிதை அம்மானை முறைப்பாடல்களில் அமைந்துள.* viii. 150/1904/II.

Q6 : 33

## 242—தியானம்

**சத்தியஜோசப்**

314. i. *ஞானபத கீர்த்தனைகளும், ஞானப்பாட்டுகளும்* ; ii. *டவுன் பிரஸ், சென்னை* ; iii. 1909 ; iv. *செ.மூ.ப.* 197 ; v. 18×13 *செ.மீ.* ; vi. 0–8–0 ; vii. *தமிழ் கிறிஸ்தவர்கள் வீடுகளில் செய்யவேண்டிய குடும்ப ஜெப முறைகளும், வீடுகளிலும் ஆலயத்திலும் பாட வேண்டிய ஞானப் பாட்டுக்களும் அடங்கியுள்ளன: ஜெபங்களும், பாடல்களும் கூறப்படவேண்டிய காலம், சந்தர்ப்பம் முதலியன குறித்தும் குறிப்புக்கள் உள்ளன.* viii. 335/1909/II.

Q6 : 412

315. i. ஞான ஒடுக்கம் ; ii. செயின்ட் ஜோஸப்ஸ் காலேஜ் பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. 1908 ; iv. உ.ப. 202 ; v. 17×11 செ.மீ. ; vi. ...... ; vii. சேசு சபையை நிறுவிய அர்ச். லொயோலா இஞ்ஞாசியார் மன்ரேசா குகையில் தேவ தாயாரின் உதவியினால் எழுதிய உன்னத நூல். இதன் கருத்துக்களைக் கொண்டது இந் நூல். சங் ஹெரதோ சுவாமி இயற்றிய ஞான முயற்சிகளின் சாரம் அடங்கிய ஒழுக்கப் புஸ்தகத்தை ஆதாரமாகக் கொண்டு இது எழுதப்பெற்றது. இதில் எட்டு நாள் தியானத்துக்கு வேண்டிய சகலமும் ஒழுங்காய்த் திட்டம் செய்யப் பட்டிருக்கிறது. viii. 475/1908/III.

Q6 : 412

**ஞானரத்தின உபாத்தியாயர், எஸ். பி. ஆர்., புதுப்பட்டி.**

316. i. பரம தியானம் : முதற் பதிப்பு ; ii. நூருல் அச்சியந்திர சாலை, திருநெல்வேலி ; iii. 1901 ; iv. செ.மூ.ப. 30 ; v. 22×14 செ.மீ.; vi. ....; vii. 'ஞானமதில் வளர் பரஞ்சோதி மயமே' என முடியும் 30] தியானப் பாடல்கள் உள ; இவை ஆசிரிய விருத்தத்தாலாகியவை. தாயுமானவர் பரமசிவ வணக்கம் பாடலின் சந்தத்தில் உள்ளன. viii. 45/1902/I.

Q6 : 412

317. i. பகிரங்க ஜெபங்கள் ; ii. எம். ஈ. பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை ; iii. 1909 ; iv. உ.ப. 34 ; v. 18×11 செ.மீ. ; vi. ......; vii. இது வெஸ்லியின் மெத்தோடிஸ்ட் சபையின் பகிரங்க ஜெப புஸ்தகம். இதில் காலை ஜெபங்கள் அமைந்துள்ளன. viii. 430/1909/II.

Q6 : 412

**பீற்றர்சன் ஐயர், எப்.—மொ. து.**

318. i. தியான மஞ்சரி ; ii. எவாங் லூத் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி ; iii. 1910 ; iv. உ.ப. 474 ; v. 22×16 செ.மீ. ; vi. ...... ; vii. வீடுகளில் காலை மாலை ஜெபத்தில் உபயோகிக்கத்தக்க செபங்களின் கோவை. இது பீற்றர்சன் ஐயரால் ஜர்மானிய பாஷையில் இயற்றிய நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு இதனைத் தமிழில் மொழிபெயர்த்தவர் சங். எம். வான்ஸகே, ஏ. லி. செபஸ்தியான் என்ற ஐயர்மார் ஆவர். இந்தியானப் புத்தகத்தில் ஒவ்வொரு சனிக்கிழமைக்கும் ஞானோபதேசத்தின் ஒரு பாகம் விஸ்தரிப்புக்காகக் குறித்திருக்கிறது viii. 541/1910/IV.

Q6 : 412

## 242·2—நித்திய தியானம்

**கொரநலியஸ், ஜே.—மொ. து.**

319. i. *காலை தியானம் : மூன்றும் பதிப்பு* ; ii. *ரிலிஜியஸ் ட்ராக்ட் அண்டு புக் சொஸைட்டி; மெதடிஸ்ட் பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை*; iii. 1909 ; iv. உ.ப. 367 ; v. 18×12 செ.மீ.; vi.........; vii. *ஸ்மித்ஸ் என்பார் எழுதிய நூலின் மொழிபெயர்ப்பு. வேத வசனத்தைத் தினந்தோறும் தியானிக்கத்தக்க வாக்கியங்கள் அடங்கிய புத்தகம் இது. காலை தியானமாகிய இந்த நூலில் ஒவ்வொரு நாளுக்கும் ஒவ்வொரு வேதவாக்கியமும் அதன் பேரில் செய்யப்பட்டிருக்கும் சுருக்கமான தியானமும் அடங்கி யிருக்கிறது.* viii. 31/1910/I.

**Q6 : 412**

320. i. **மாமரியின் மைந்தர் பொக்கிஷம்** ; ii. *ஜோசப் இண்டஸ்டிரியல் ப்ரஸ், திருச்சி* ; iii. 1910 ; iv. உ.ப. 412 ; v. 12×9 செ.மீ.; vi. ......; vii. *தினமும் செய்யவேண்டிய முக்கிய செபங்கள் அடங்கிய தொகுதி இந்த மந்திரமாலை. இந்தப் புஸ்தகத்திலே நல்ல கிறிஸ்துவனுக்கு வேண்டிய செபங்களெல்லாம் ஏராள மாய்க் கொடுத்திருப்பதுமன்றி, தேவ தாயின் சபையோருக்குப் பிரயோசனமான விஷயங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. முதற் பிரிவில் சபைகளின் உற்பத்தி வரலாறும் அவற்றால் விளையும் நன்மைகளின் விவரமும் சொல்லப்பட்டுள்ளன. பின், மந்திர மாலை, செபம், பூசை காணும் வகை, பக்தி வணக்கம் முதலிய பகுதிகள் உள. பொருள் அட்டவணை நூல் இறுதியில் தரப்பெற்றிருக்கிறது.* viii. 724/1910/III.

**Q6 : 412**

## 252—பிரசங்கங்கள்

**சாமுவேல் ஐயர், சா., தரங்கை.**

321. i. *கிராமப் பிரசங்க புத்தகம்* ; ii. *ஈவான்ஞ் லூத் மிஷன் ப்ரஸ், தரங்கம்பாடி* ; iii. 1902 ; iv. உ.ப. 527 ; v. 22×15 செ.மீ. ; vi. ......; vii. *சுவிசேஷ வாக்கியங்களின் பேரிலும் இரட்சகர் பாடுபட்ட சரித்திரத்தின் பேரிலும் அமைந்த பிரசங்கங்கள் அடங்கி யுள்ளன. கர்மானிய, ஆங்கிலேய, தமிழ்ப் பாஷைகளிலுள்ள அநேக சிறந்த வியாக்கியான பிரசங்க நூல்களைத் தழுவி இயற்றப் பெற்றது. கிராமச் சபைகளுக்குப் பயன்படத்தக்கவகையில் இப் புத்தகம் எழுதப்பெற்றுள்ளது.* viii. 198/1902/II.

**Q6 : 52**

322. i. **பிரசங்கங்கள்** ; ii. ........; iii. 1907 ; iv. உ.ப. 64 ; v. 21×14 செ.மீ.; vi. ........; vii. *பதின்மூன்று பிரசங்கங் கள் உள. கிறித்து நாதரின் கருணையையும் மக்களின் கடமை யையும் எடுத்துரைப்பது.* viii. 324/1907/IV.

**Q6 : 52**

**ஜான் உவெஸ்லி ஐயர்**

323. i. பன்னிரண்டு பிரசங்கங்கள் ; ii. கிரிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி, சென்னை ; எஸ். பி. சி. கே. ப்ரஸ், சென்னை ; iii. 1910 ; iv. உ.ப. 287 ; v. 19×13 செ.மீ.; vi. ........ ; vii. ஜான் உவெஸ்லி ஐயர் 1703-ல் பிறந்து 1791-ல் எண்பத் தெட்டாம் வயதில் மரித்தார். 1738-ஆம் ஆண்டு தொடங்கி தமது ஆயுசு காலம் எல்லாம் சுவிசேஷ ஊழியம் செய்து வந்த வர். இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, உவேல்ஸ், ஐர்லாந்து என்னும் நாடுகளில் எல்லாம் இவர் ஊழியம் செய்திருக்கிறார். இவர் செய்த 141 பிரசங்கங்களிலிருந்து 12 பிரசங்கங்கள் தேர்ந்து பிரசுரிக்கப்பட்டன. இந்த நூலின் மொழிபெயர்ப்பே இது. தேவ சகாயம் என்பவரால் தொடங்கப்பெற்று டேவிட் ஐயராலும், ஏ.வி. கிலேத்தன் ஐயராலும் முற்றுவிக்கப்பெற்றது இந்நூல். ஒவ் வொரு பிரசங்க முடிவிலும் வினாக்கள் கொடுக்கப்பட்டிருக் கின்றன. viii. 331/1910/I.

Q6 : 52

## 291—சர்வ சமயம்

**ஆறுமுக நயினார் பிள்ளை, த.**

324. i. சத்சமய விளக்கம்—பகுதி 1 ; ii. ஸ்ரீ காந்திமதி விலாசம் பிரஸ், திருநெல்வேலி ; iii. 1904 ; iv. உ.ப. 38 ; v. 20×14 செ.மீ. ; vi. ........ ; vii. இந்து சமயப் பெருமையை விளக்குவது. இசுலாம், கிறித்துவ மதக் கோட்பாடுகள் பற்றியும் ஆசிரியர் இதில் குறித்துள்ளார். பிற மதங்களின் கொள்கை காட்டி இந்து மத ஏற்றம் புலப்படுத்தியுள்ளார். viii. 66/1904/ III.

QA

325. i. சத்சமய விளக்கம்—பகுதி 2 ; ii. ஸ்ரீ காந்திமதி விலாசம் பிரஸ், திருநெல்வேலி ; iii. 1904 ; iv. உ.ப. 35 ; v. 20×13 செ.மீ. ; vi. ......; vii. ஜீவகோடிகளின் உற்பத்தி பற்றி ஒவ்வொரு மதத்தினரும் கொண்ட கொள்கை பற்றிய விளக்கம் இந்நூல். ஆத்மாவைப் பற்றி ஆராய்வது. viii. 67/1904/IV.

QA

**இராமச்சந்திர சாஸ்திரியார், விஷ்ணுபுரம்—மொ. து.**

326. i. சர்வதரிசன சங்கிரகம் ; ii. கோ. வடிவேலு செட்டியார் & ம. சண்முக முதலியார் ; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, கோமளேசுவரன்பேட்டை, சென்னை ; iii. 1910 ; iv. உ.ப. 322; v. 22×14 செ.மீ. ; vi. 2-8-0 ; vii. லோகாயத மதம் முதல்

சங்கரர் வேதாந்த மதம் ஈருகப் பதினறு மத சித்தாந்தங்களை விளக்குவது இந்நூல். இது பிரபோத சந்திரோதயம் சிவ ஞான சித்தியார் பாபட்சம் முதலிய நூல்கள் இயற்றுவதற்குக் கருவூலமாயிருந்தது ' என்கிறார் பதிப்பாசிரியர். சமஸ்கிருத மூல நூலை இயற்றிய வித்தியாரண்ய சுவாமிகள் சரித்திரச் சுருக்கம் முதற்கண் தரப் பெற்றிருக்கிறது. இச்சுவாமிகள் அருளிய 30 நூல் களின் பெயர்களும் இதில் காணலாம். viii. 89/1910/III.

QA

**நா. கி. ரா.**

327. i. ஸர்வ மத ஸங்கிரஹம் ; ii. கல்யாணசுந்தரம் அச்சுயந்திர சாலை, தஞ்சாவூர் ; iii. 1910 ; iv. உ.ப. 12 ; v. 11×7 செ.மீ.; vi. 0–0–6 ; vii. இது பிரஹ்மம் ஒன்றே என்னும் தத்துவத்தை விளக்கிக் கூறும் சிறு நூல் viii. 133/1910/IV.

QA

**முத்துவீர உபாத்தியாயர், பூ., சென்னை.**

328. i. சர்வசமய சமரசச் சந்திரிகா ; ii. இந்து மாரல் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1902 ; iv. உ.ப. 48 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. ஆன்றோர் இயற்றிய நூற்களை ஆதாரமாகக் கொண்டு தத்துவ உண்மைகளை உரைக்கும் சிறுநூல். viii. 95/1903/I.

QA

# 294—இந்து சமயமும் பௌத்த சமயமும்

## 294.3 பௌத்த மதம்

**ஆல்காட், எச். எஸ்.**

329. i. பௌத்த தர்ம சுருக்க வினு விடை : முதற் பதிப்பு ; ii. ......; iii. 1905 ; iv. உ.ப. 50 ; v. 20×14 செ.மீ. ; vi. ........; vii. தியாசபிகல் சொஸைடியின் தலைவராக விருந்த ஹென்றி ஆல்காட் என்பவரால் இயற்றப்பெற்ற நூலின் மொழிபெயர்ப்பு. வினு விடை முறையில் பௌத்த தர்மம் பற்றி விவரிப்பது. மொழிபெயர்ப்பாசிரியரின் பெயர் தெரிய வில்லை. viii. 172/1905/I.

Q4:3

**ஆனந்தஜி**

330. i. பௌத்த தர்மம் ; ii. பண்டித மித்ர ப்ரஸ், சென்னை ; iii. 1904 : iv. உ.ப. 30 ; v. 18×12 செ.மீ. ; vi. ........; vii. புத்தர் நிகழ்த்திய மகாசாந்தி உபதேசத்தைப் பங்காள, பிராகிருத, சம்ஸ்கிருத புத்தகங்களின் ஆராய்ச்சிக்கு ஏற்ப இத் தமிழ்நாட்டில் யாவரும் எளிதில் உணர வசன நடையில் எழுதப் பெற்றது. viii. 103/1904/I.

Q4 : 3

331. i. நந்தன் சரித்திர விளக்க வினாவிடை ; ii. புத்திஸ்டு பிரஸ், சென்னை ; iii. 1905 ; iv. உ.ப. 14 ; v. 21×13 செ.மீ. ; vi. ........ ; vii. நந்தன் என்னும் புத்த மார்க்க வரசன் மெய்ச் சரித்திரத்தையும் பார்ப்பானுக்கு அடிமைப் பறையன் நந்தன் என்னும் பொய்ச் சரித்திரத்தையும் வினா விடையாக விளக்கி, சாக்கைய புத்த சங்கத்தாரால் எழுதி வெளி யிடப்பெற்றது இந்நூல். viii. 123/1905/IV.

Q4 : 3

**பெரியசாமிப் புலவர், ஏ. பி.**

332. i. புத்த பகவான் ஸ்தௌத்யபத்து ; ii. பூலோகவியாஸன் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1910 ; iv. செ.மூ.ப. 12 ; v. 21×14 செ.மீ. ; vi. ........ ; vii. புத்த பகவானைக் குறித்த துதிமாலை. இக்கீர்த்தனங்கள் சேலம் ஜில்லா திருப்பத் தூர்த் தென்னிந்திய சாக்கைய பௌத்த சங்கத்தார் விருப்பத்திற் கிணங்கப் பாடப்பெற்றது. கௌதம சாக்கைய முனி பரிநிருவாண மடைந்த 3395-ஆம் வருஷத்துக்குச் சரியான 1910-ம் வருஷம், ஜனவரி மாதம், 13-ஆம் தேதி இச்சங்கத்தில் அரங்கேற்றம் செய்யப்பெற்றது இந்நூல். முதலில் உள்ள துதிப்பத்து பதி நான்கு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. பௌத்த தர்மம் பற்றிய கீர்த்தனைகள் சிலவும் ஈற்றில் உள்ளன. viii. 401/1910/I.

Q4 : 3

## 294·5—இந்து சமயம் : பொது

**இராமாநுஜ பாவலர், ச. கி. ம.**

333. i. சைவ பூஷண சந்திரிகா பங்கம் ; ii. ஸ்ரீநிகேதனம் அச்சியந் திரசாலை, சென்னை ; iii. 1903 ; iv. உ.ப. 8+24+3 ; v. 18×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. 'சைவ பூஷண சந்திரிகை' என்னும் நூல் வாயிலாக வைணவ மதக் கோட்பாடுகளுக்கு மாறான செய்திகள் வெளிவந்தமை குறித்து எழுதப்பெற்றது இந்நூல். அவரவர் தத்தம் மதங்களினின்று வரம்பு கடந்து நடப்பாராயின் இம்மை மறுமைப் பயன்கள் இழப்பது திண்ணம் என்பதைத் தலைமையாக எடுத்தோதுவது. சாஸ்திரங்களுக்கு உட்படாமல் விதண்டாவாதம் செய்வதைக் கண்டித்துரைப்பது. viii. 242/1903/III.

Q2

**நாராயணன், ப.—மொ. து.**

334. i. ஹிந்து மத தூஷணையின் பரிகாரம் : முதற் பதிப்பு ; ii. விக்டோரியா அச்சு ஆபீஸ், மதுரை ; iii. 1909 ; iv. உ.ப. 103+2+2 ; v. 16×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. இது

அன்னிபெஸண்டு அம்மையார் ஆங்கிலத்தில் எழுதியுள்ள நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு. 14 அதிகாரங்கள் உள. விக்கிரக ஆராதனே, தேவர்களின் பூஜை, திருமூர்த்திகள் முதலிய பல வற்றால் பிறருடைய தூஷணைகளுக்கு விடை பகர்வது போல் உள்ளது. ஒன்பதாம் அதிகாரத்தில் ஹிந்து மதம் சாஸ்திரத் திற்கும், யுக்திக்கும் ஒற்றுமையுடானது என்பதைப் பற்பல எடுத்துக்காட்டுகள் தந்து விரிவாக எழுதியுள்ளனர். ஒற்றில் ஆரிய சமய நீதி முறைகளும் உயர் நலம் அமைந்த தர்ம முறைகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 267/1909/III.

Q2

335. i. ஸநாதத் தர்ம பிரச்நோத்தரம்; ii. தியாஸிபிகல் சொஸைடி அடையாறு; மினர்வா ப்ரஸ் சென்னை; iii 1902; iv. உ.ப. 24: v. 19×13 செ.மீ.; vi. 0-1-0: vii. மாணவர்களுக்கு ஏற்ற வகையில்; இந்து மத தர்மம் பற்றிக் கூறுவது. ஹிந்து மத மூல தத்துவங்கள், ஹிந்து மத பொது கர்மானுஷ்டனங்கள் ஹிந்து நீதிகள் என்னும் மூன்று பகுதியாய் 58 பிரச்ன உத்தரங் களாக உள்ளன. காசிப் பிரதான ஹிந்து வித்தியாசாலைக் கமிட்டியாரால் பிரசுரஞ் செய்யப்பட்ட கிரந்தத்தை இங்கிலீஷி லிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. viii. 43/1902/II.

Q2

## 294·33—யோகம், நிஷ்டை, விக்கிரக வழிபாடு

336. i. உயர்வு மொழி; ii. ஸ்ரீசிவநாம சங்கீத தியான பஜனை அடியார்; ஸ்ரீஜெய விநாயக சிவப்பிரகாச அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1910; iv. உ.ப. 20; v. 22×14 செ.மீ.; vi. ......; vii. சென்னை, சேத்துப்பேடு "ஸ்ரீஜெய விநாயக சிவப்ரகாஸ மடாலயத்தில்" நிறைவேறிய தைப்பூச, மஹா சிவராத்திரி வைபவங்களின் உண்மையை விளக்கும் உயர்வு மொழி என்பது இதன் முழுப் பெயர். சிவசமய திருப்பணித் கூட்டத்தாரைப் பற்றியும் அச்சபை முயற்சியால் நடைபெற்ற பூச விழா, மஹாசிவராத்திரி விழா முதலியன பற்றியும் விவரித்து உரைக்கின்றது. viii. 669/1910/III.

Q2:4

**ஔவையார்**

i. உயர்ஞான சரநூல் (தொ. எ. 52 பார்க்க); ii. தேவேந்திரநாத பண்டிதர், சோதிட கணிதர் செழுமணவை; ஆயுர்வேத அச்சுக் கூடம், சென்னை; iii. 1907; iv. செ.மூ.உ.ப. 12; vii. ஔவையார் ஒரு வேளானனுக்கு உபதேசித்ததாகச் சொல்லப் பெறுவது இந்நூல். viii. 297/1907/II.

Q2:4

337. i. கடவுள் வழிபாடு ; ii. ஆனந்த ஷண்முக சரணாலயன், தில்லைவளாகம் ; எட்வர்ட் அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. மார்ச்சு, 1910 ; iv. உ.ப.+செ. மூ. ப. 12; v. 16×10 செ. மீ. ; vi. ......... ; vii. திருவாரூரில் ஸ்ரீ கமலாம்பிகா விலாஸ சங்க வருடமகோத்ஸவ காலத்தில் பாண்டித்துரைத் தேவர் தலைமையின்கீழ், தில்லைவளாகம் சிவாநந்தானுபூதி நிலயம் ஆனந்த ஷண்முக சரணாலயனால் வெளியிடப்பெற்றது. கடவுள் வழிபாடுபற்றிய கருத்துக்களைத் தெளிவுற விளக்கிக் கூறு கின்றது. viii. 191/1910//II.

Q2 : 4

**சங்கரனார்**

i. சரநூல்—மூலமும் உரையும் (தொ. எ. 52 பார்க்க) ; ii. தேவேந்திரநாத பண்டிதர், சோதிட கணிதர், செழுமணவை ; ஆயுர்வேத அச்சுக்கூடம், சென்னை ; iii. 1907 ; iv. செ. மூ. உ. ப. 34 ; vii. 'உமையவளுக்குச் சங்கரனார் திருவுளம் மகிழ்ந்து அருளிச் செய்தது' என்று முகப்பில் காண்கிறது. சோதிடத்தை அறியாதவர்கள் மன நிறைவாய் அறியும் வகைதனை உரைப்பது. இதற்கு உரையும் உள்ளது. viii. 297/1907/II.

Q2 : 4

**சங்கரீஸ்வரர்**

338. i. சுத்தஞானம் [மும்மூலகற்பம், ரத்தினச் சுருக்கம், வாத சூத்திரம், நாதாந்தத்திறவு கோல்] ; ii. பெ. சொக்கலிங்கம் பிள்ளை, திருநெல்வேலி ; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல் வேலி ; iii. 1910 ; iv. செ. மூ. எ. 1 ; v. 15×11 செ. மீ. ; vi. ........ ; vii. .......... ; viii. 82/1910/II.

Q2 : 4

i. நாதாந்தத் திறவுகோல் (தொ. எ. 338 பார்க்க) ; ii. பெ. சொக்கலிங்கம் பிள்ளை, திருநெல்வேலி ; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி ; iii. 1910 ; iv. செ. மூ. எ. 15 ; viii. 82/1910/II.

Q2 : 4

i. மும்மூலகற்பம் (தொ. எ. 338 பார்க்க) ; ii. பெ. சொக்க லிங்கம் பிள்ளை, திருநெல்வேலி ; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி ; iii. 1910 ; iv. செ.மூ.எ. 3 ; viii. 82/1910/ II.

Q2 : 4

i. *ரத்தினச் சுருக்கம்* (தொ. எ. 338 பார்க்க); ii. பெ. சொக்கலிங்கம் பிள்ளை, திருநெல்வேலி; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி; iii. 1910; iv. செ. மூ. எ. 5; viii. 82/1910/II.

Q2 : 4

i. *வாத சூஸ்திரம்* (தொ. எ. 338 பார்க்க); ii. பெ. சொக்கலிங்கம் பிள்ளை, திருநெல்வேலி; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி; iii. 1910; iv. செ. மூ. எ. 7; viii. 82/1910/II.

Q2 : 4

**சிவஞான யோகிகள், விருதை.**

339. i. தேவோபாசன தீபம்—முதற் பாகம்; ii. குமாரெட்டுப் பாண்டியனவர்; ஸ்ரீவித்தியா விநோதினி அச்சுக்கூடம், தஞ்சாவூர்; iii. 1907; iv. உ.ப. 170; v. 16×12 செ. மீ.; vi. 0–8–0; vii. விருதை சிவஞான யோகிகள் விக்கிரகாராதனம் பற்றிச் செய்த பிரசங்கங்களின சாரம். ஆத்திகம், தெய்வவியல முதலிய 94 விஷயங்கள் பற்றிய விரிவு இதன்கண் உள்ளது. விக்கிரக ஆராதனம் செய்வது கர்மம், யோகம், சமாதி முதலிய மோக்ஷ சாதனங்களுள் ஒன்று என்றும் அநேக ஆதாரங்களைக் கொண்டு விளக்கிக் காட்டியுள்ளார். இந்துக்களின் விக்கிரக ஆராதனம் பற்றிப் பிற மதத்தார் கொண்டுள்ள எண்ணம் தவறு என்று எடுத்துக் காட்டும் நோக்கத்துடன் இந்நூல் இயற்றப் பெற்றது. viii. 87/1908/I.

Q2 : 4

340. i. **சிவ பூசைத் திரட்டு**; ii. ரிப்பன் அச்சியந்திரசாலை, மதராஸ்; iii. 1909; iv. செ. மூ. எ. 1+125+9; v. 16×12 செ. மீ.; vi. 0–2–0; vii. சைவ சமயாசாரியர்களின் நூல்களிலிருந்து சிவ பூசைக்குரிய செய்யுள்கள் திரட்டித் தரப்பட்டுள்ளன. திருக்கோயிலுக்குச் செல்லும முறையும் அங்கு எவ்வெம் முறையில் நடந்து கொள்ள வேண்டும் என்பதும், வழிபடும் முறைகளும் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 421/1909/III.

Q2 : 4

341. i. **தன்னிலை விளக்கம்**; ii. . . . . . . . . . . . . .; iii. 1909; iv. செ. மூ. எ. 14+20; v. 20×13 செ. மீ.; vi . . . . . . .; vii. சந்திர கலை, சூரிய கலை பற்றி உரைப்பது. கச்சி நகர்த் தேவாலயங்கள் பற்றிய நிலைகள் குறிக்கப் பெற்றுள்ளன. viii. 649/1909/IV.

Q2 : 4

**நாராயண ஸ்வாமி அய்யர்—மொ. து.**

**342.** i. கர்ம யோகம்—முதற் பாகம் ; ii. எட்வர்டு ப்ரஸ், திருவாரூர் ; iii. 1910 ; iv. உ. ப. 28 ; v. 18×12 செ. மீ.; vi. 0–2–0 ; vii. விவேகானந்தர் நூலின் மொழி பெயர்ப்பு. ‘ கர்மயோகம் ’ பற்றிச் சுவாமிகளின் கருத்துக்கள் இதில் உள்ளன. ஸ்ரீமான் விவேகானந்தாப் பதிப்பு வரிசையில் இது இரண்டாவது புத்தகம். viii. 506/1910/I.

Q2 : 4

**பீர்முகமது**

i. திருமெஞ்ஞான சரநூல் (தொ. எ. 52 பார்க்க) ; ii. தேவேந்திரநாத பண்டிதர், சோதிட கணிதம், செழுமணவை ; ஆயுர் வேத அச்சுக்கூடம், சென்னை; iii. 1907 ; iv. செ. மூ. எ. 1+30 ; viii. 297/1907/II.

Q2 : 4

**முருகேச முதலியார், க. சி.**



**343.** i. திருநெல்வேலி ஸ்ரீ அநவரத தான நாதர் ஆனி விழா வணி மாலை ; ii. நூருல் இஸ்லாம் அச்சியந்திரசாலை, திருநெல்வேலி; iii. 1905 ; iv. செ. மூ. எ. 32+3 ; v. 13×11 செ. மீ. ; vi. .......... ; vii. நெல்லை நகர் ஈசருக்கு நடைபெறும் ஆனித் திருவிழாவைப் பற்றி உரைப்பது. viii. 9/1905/IV.

Q2 : 4

**344.** i. **யோகாமிர்த விளக்கம்** ; ii. நாராயணராவ் & எம். கே. சபாபதி பிள்ளை ; கல்யாணசுந்தரம் முத்திராசாலை, தஞ்சை ; iii. ஆகஸ்டு, 1905 ; iv. செ. மூ. எ. 100+1 ; v. 14×11 செ. மீ. ; vi. ... .... ; vii. ‘ துறை காண விளக்கம் ’ என்னும் யோகாமிர்த விளக்கம் என்பது இதன் முழுப் பெயர். யோக நிலை பற்றி விவரிப்பது. ‘ சூரியனும் சந்திரனும் தோற்றமாமே ’ என்பதை இறுதியாகக் கொண்டு அமைந்துள்ளன எல்லாப் பாடல்களும். viii. 234/1905/III.

Q2 : 4

**ஸத்யோஜாத சிவாச்சாரியார், திருவானைக்கா.**

**345.** i. விக்ரஹ ஆராதநம் ; ii. எல். வி. பிரஸ், திருச்சி ; iii. 1910 ; iv. உ. ப. 8 ; v. 14×11 செ. மீ. ; vi........ ; vii. விக்கிரக வழிபாட்டின் தத்துவம் பற்றி பற்பல எடுத்துக் காட்டுகளுடன் ஆசிரியர் விளக்கியுரைக்கின்றார். விக்கிரக வணக்கம் செய்பவர் கடவுள் லட்சணத்தை அறிந்த ஞானியே என்பது எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. viii. 25/1910/IV.

Q2 : 4

## 294.535—தல புராணம்

**அண்ணாமலை தேசிகர், திருவண்ணாமலை.**

346. i. சிவக்ஷேத்திர விளக்கம் [சைவ சமயம், சைவ சமயி, அநாசாரம், திருக்கோயிற் குற்றங்கள்] ; ii. ம. முத்துகுமார சாமி தேசிகர் & அ. குமாரசாமிப் பிள்ளை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1901 ; iv. உ. ப. 4+65 ; v. 17×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. சிவ க்ஷேத்திரங்களின் வரலாறு சுருக்கமாகவும், தெளிவாகவும் உரைப்பது. மூர்த்தி, தலம், தீர்த்தம் முதலிய விவரங்கள் உள்ளன. இதன் பிற் சேர்க்கையாக ஆறுமுக நாவலர் எழுதிய சைவ சமயம், சைவ சமயி, அநாசாரம், திருக்கோயிற் குற்றங்கள் உள்ளன. viii. 182/1901/IV.

Q2 : 38

**அருணாசலக் கவிராயர், மு. ரா.**

347. i. திருக்குற்றாலத் தல புராண வசனம் ; ii. விவேகபாநு ப்ரஸ், மதுரை ; iii. 1906 ; iv. உ. ப. 339 ; v. 16×13 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. வடமொழிக் காந்த புராணத்தில் சங்கர சங்கிதை, சனற்குமார சங்கிதைகளின் சாரமாய் அமைந் தது திருக்குற்றாலத் தல புராணமான்மியம். இதனைப் பின்பற்றிச் செய்யுளில் புராணம் பாடியவர் திரிகூடராசப்பக் கவிராயர். இவருடைய புராணம் தான வைபவ காண்டம், சிவ ரகசிய காண்டம் என இரண்டு பெரும் பிரிவுடையதாய் 32 பட லங்களில் விரித்துரைக்கப் பெற்றது. இதனைப் பின்பற்றி எழுதப் பெற்றது இவ்வுரைநடை நூல். viii. 67/1906/IV.

Q2 : 38

**அருணாசல சுவாமிகள், வேலமாநகரம்.**

348. i. காவேரியின் தீர்த்தமான்மியம் ; ii. சுந்தரராஜுலு நாயுடு, ஈரோடு ; சென்ட்ரல் ப்ரஸ், ஈரோடு ; iii. 1910 ; iv. உ. ப.+ செ. மூ. ப. 8 ; v. 23×13 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. காவேரி நதியின் புராணப் பெருமைகளை சூத பௌராணிகர் நைமி சாரண்ணிய முனிவர்களுக்குச் சொல்லும் பாவனையாக இயற்றப் பெற்றது. காவேரியின் பெருமை குறித்து நாதநாமக்கிரியை இராகத்தில் அமைந்த கீர்த்தனை ஒன்றும், நொண்டிச் சிந்துப் பாடல் ஒன்றும் ஆக இரண்டு இசைப் பாடல்களும் இதில் உள்ளன. viii. 521/1910/III.

Q2 : 38

**அழகர்சாமி பிள்ளை, ம., மதுரை.**

349. i. திருநெல்வேலித் தல புராண வசனம்; ii. அ. சுந்தர நாதம் பிள்ளை & ம. அழகர்சாமிப் பிள்ளை; ஸ்ரீவித்யா விநோதினி அச்சியந்திரசாலை, தஞ்சாவூர்; iii. 1910; iv. உ. ப. 436; v. 22×14 செ. மீ.; vi. ......; vii. நெல்லையப்பக் கவிராயர் என்பார் பாடிய செய்யுட் புராணத்தைப் பின்பற்றி எழுதப் பெற்ற உரைநடை. 120 சருக்கங்கள் கொண்டது. சருக்கந்தோறும் கடவுள் வாழ்த்துப் பாடல் தரப் பெற்றிருக்கிறது. திருநெல்வேலி காந்திமதி நெல்லையப்பர் கோவிலில் 12 மாதங்களிலும் நடக்கும் உற்சவங்களின் விவரமும் தரப் பெற்றிருக்கிறது. viii. 536/1910/II.

Q2: 38

**அழகிய மணவாள ராமாநுஜதாசர், புவனகிரி.**

350. i. திருமுட்ட புராணச் சுருக்கம்; ii. செங்கல்வராய நாயகர் ஆர்பனேஜ் அச்சுக்கூடம், சென்னை; iii. 1908; iv. உ. ப. 140; v. 20×12 செ. மீ; vi. 0–12–0; vii. திருமுட்டத் தலத்தின் புராண சரிததை வசன நடையில் தருவது இந்நூல். மூர்த்தி மான்மிய காண்டம், க்ஷேத்திர மான்மிய காண்டம், தீர்த்த மான்மிய காண்டம், ஞான மான்மிய காண்டம் என நான்கு காண்டங்கள் கொண்டது. ஒவ்வொரு காண்டத்திலும் பல படலங்கள் உள்ளன. viii. 193/1908/II.

Q2: 38

**ஆதியப்பனூர், களந்தை.**

351. i. திருக்களர்ப் புராணம்; ii. அ. நாராயணசாமி ஐயர், பின்னத்தூர்; ஸ்ரீவித்தியா முத்திராக்ஷரசாலை, கும்பகோணம்; iii. 1902; iv. செ. மூ. ப. 411; v. 19×13 செ. மீ.; vi. ......; vii. எழு சருக்கங்கள் கொண்டது இப்புராணம். திருக்களர் என்னும் இவ்வூர், தஞ்சாவூர் மாவட்டத்தில் மன்னார்குடித் தாலுக்காவைச் சார்ந்தது. முதற்கண் திருக்களர்ச்செப்பேட்டுச் சாதனங்களும் புராண வசனச்சுருக்கமும் உள்ளன. viii. 108/1902/IV.

Q2: 38

**ஆராவமுதாசாரியார், திருச்சுழியல்.**

352. i. திருச்சுழியல் புராணம்; ii. அம்பலவாண நாவலர், திருநெல்வேலி; கலாரத்நாகர யந்திரசாலை, சென்னை; iii. 1902; iv. உ. ப. 11+10+11+744; v. 20×13 செ. மீ.; vi. ....; vii. திருச்சுழலியலின் தலபுராணம். பாயிரம் உட்பட 16 சருக்கங்கள் உள்ளன. viii. 279/1902/I.

Q2: 38

**ஆலாலசுந்தரம்பிள்ளை, கா. எ.—மொ. து.**

i. *காமாக்ஷி லீலாபிரபாவம்* (தொ.எ. 368 பார்க்க); ii. வித்யா பாஸ்கர அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1906; iv. உ. ப. 104; vii. காஞ்சியின் மகிமை குறித்து வடமொழியில் உள்ள 'பஞ்சரசத்' என்கிற நூலிலும், 'சதாத்யாயம்' என்னும் நூலிலும், 'காமாக்ஷி விலாசம்' என்கிற நூலிலும் உள்ளன. இவற்றுள் முதல் இரு நூல்களும், முறையே சிவஞான யோகிகளாலும், கச்சியப்ப முனிவராலும் தமிழில் செய்யுட் புராணமாக மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன. மூன்றாவது நூலாகிய காமாக்ஷி விலாசத்தை உரை நடையில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார் இந்நூலாசிரியர். இப் பிரபாவம் 14 அத்தியாயங்களைக் கொண்டது. viii. 326/1906/IV.

Q2 : 38

353. i. **ஆழ்வார் திருநகரியென்னும் திருக்குருகூர் மஹாத்மியம்** [சுவாமி நம்மாழ்வார் வைபவம், சுவாமி நம்மாழ்வார தாலாட்டு] : முதற்பதிப்பு; ii. வி. ரெங்கநாதபிள்ளை, திருநெல்வேலி & பெரிய நம்பி வகுளபூஷணுச்சாரியார் சுவாமிகள், ஸ்ரீ வைகுண்டம்; நூருல் இஸ்லாம் அச்சியந்திரசாலை, திருநெல்வேலி; iii. அக்டோபர், 1905; iv. உ. ப. 7+52; v. 22×14 செ. மீ.; vi. ......; vii. திருக்குருகூரின் புராணப் பெருமையினை உரைப்பது. நான்கு அத்தியாயங்கள் கொண்டது. viii. 149/1905/IV.

Q2 : 38

**ஆழ்வாரப்ப பிள்ளை, மு.—மொ. து.**

354. i. *வள்ளியூர் ஸ்தலபுராணம்*; ii. சிதம்பரநாதன் கவிராஜர்; மினர்வா அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1906; iv. உ. ப. +செ. மூ. ப. 27+410; v. 22×15 செ. மீ.; vi .. ..; vii. ஸ்ரீவல்லிமா நகரமென்று பெயர் வழங்கிய வள்ளியூர் ஸ்தலபுராணம் என்பது இதன் முழுப் பெயர். வடமொழியிலிருந்து மொழி பெயர்த்துச் செய்யுள் நடையாக இயற்றப் பெற்றது. 25 அத்தியாயங்கள் கொண்டது. இப்புராணத்தின் உரைநடைச் சுருக்கமும் முகப்பில் உள்ளது. viii. 289/1906/III.

Q2 : 38

**இராமாநுஜசாரியார், ம. வீ.**

i. *திருவானைக்காமான்மியம்* (தொ.எ. 360 பார்க்க); ii. ஸ்ரீ வாணி விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்; iii. 1909; iv. உ.ப. 61; vii. புராணத்தின் வரலாற்றை உரை நடையில் தெளிவுற உரைக்கின்றது. viii. 526/1909/III.

Q2 : 38

355. i. இராயவேலூர் என வழங்கும் வேலைமாநகர் சரிதை ; ii. சி. பார்த்தசாரதி நாயகர் ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. 1909 ; iv. உ. ப. 47 ; v. 15×11 செ. மீ. ; vi. 0–2–6 ; vii. இது முதன்முதல் 1876 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் திரு வேங்கடம்பிள்ளை என்பாரால் வேலூர் விமல விலாச அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றது. இந்தப் பிரதிக்கு இணங்கப் பதிப்பித்த மறுபதிப்பே இந்நூல். இந்நூலின ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இவ்வூர்க்கோயில் வரலாறும், தலபுராணமும், சரித்திர வரலாறுகளும் கொடுக்கப்பட்டுள்ளன. ஜல கண்டேஸ்வரர் துதியான பதிகம் ஒன்றும் இதில் உள்ளது. viii. 220/1909/III.

Q2 : 38

356. i. உத்தம சோழபுரம் கரபுர நாத புராணம் : [கரபுர நாதர் போற்றிக் கலிவெண்பா] ; ii. அ. துரைசாமிபிள்ளை ; விவேக திவாகரன் அச்சியந்திரசாலை, சேலம் ; iii. 1910 ; iv. செ. மூ. உ. எ. 520 ; v. 23×15 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. வடமொழியிலிருந்து இப்புராணம் பாடலாக மொழி பெயர்த்தியற்றப் பெற்றது. பாயிரம் நீங்கலாக 12 சருக்கங்கள் உள்ளன. மூல நூல் செய்தார் பெயர் அறியக்கூடவில்லை. சு. அர்த்தநாரீச நாயகர் என்பார் இயற்றிய பொழிப்புரை இந்நூற்குளது. ஒவ்வொரு சருக்கத்துக்கும் உரிய கதைச் சுருக்கம் அவ்வச்சருக்கத்தின் ஈற்றில் அமைக்கப்பெற்றிருக்கிறது. viii. 314/1910/II.

Q2 : 38

**உமாபதி சிவாசாரியர்**

357. i. சிதம்பர புராணம் ; ii. அ. தங்கவேலுப்பிள்ளை ; மகாலக்ஷ்மி விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1906 ; iv. செ. மூ. உ. எ. 813 ; v. 21×13 செ. மீ. ; vi. 1–8–0 ; vii. தில்லைச் சிதம்பரத்தின் சிறப்பினை ஓதுவது ; பாயிரம் உட்படப் பத்துச் சருக்கங்கள் கொண்டது. நூல முழுமைக்கும் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் மாணுக்கருள் ஒருவராகிய சிதம்பரம் உபாத்தியாயர், பே. இராமலிங்கம் பிள்ளை செய்த புத்துரை உள்ளது. viii. 54/1906/II.

Q2: 38

**எல்லப்ப நாவலர்**

358. i. அருணுசல புராணம் [அருணுசலேசுரர் தோத்திரப் பிரபந்தத் திரட்டு] ; ii. கொ. லோகநாத முதலியார் ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1902 ; iv. செ. மூ. எ. 649 ; v. 17×13 செ. மீ. ; vi. ......; vii. பாயிரம் உட்படப் பதின்மூன்கு சருக்கங்கள் உள்ளன. சருக்கங்களின் பொருட் சுருக்கம் ஒவ்வோர் சருக்கத்தின் முதலிலும் உள்ளன. மழவை மகாலிங்கையர் செய்த உரை நூல் முழுமைக்கும் உள்ளது. viii. 131/1903/I.

Q2 : 38

ஏகாம்பர முதலியார், செஞ்சி

359. i. அருணாசல புராண வசனம் : முதற்பதிப்பு ; ii. கன்னைய நாயுடு ; கிளாரஸ்டன் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1903 ; iv. உ. ப. 104 ; v. ...... ; vi. 0–6–0 ; vii. அருணாசல புராணத்திற்கு மழவை மகாலிங்க அய்யர் செய்த உரையை விசேஷப்படுத்தி வசன நடையில் ஆக்கப்பெற்றது இந்நூல். 13 சருக்கங்கள் உள்ளன. viii. 92/1904/I.

Q2: 38

கச்சியப்ப முனிவர்

360. i. திருவானைக்காப்புராணம் [திருவானைக்கா மான்மியம்] ; ii. ஸ்ரீவாணிவிலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம் ; iii. 1909 ; iv. செ. மூ. ப. 208 ; v. 25×16 செ.மீ. ; vi. ...... ; vii. நூலாசிரியர் கச்சியப்ப முனிவரின் சரித்திரமும், அவர் இயற்றிய நூல்களின் விவரமும், முதலில் உள. ம. வீ. இராமநுஜாசாரியர் இப் புராணத்தைத்தழுவி எழுதிய உரைநடைப்பகுதியும் முதலில் உளது. கடவுள் வாழ்த்து, அவையடக்கம், திருநாட்டுச் சிறப்பு, திருநகர்ச் சிறப்பு நீங்கலாக 21 படலங்கள் உள. 1909-ல் நிகழ்ந்த கும்பாபிடேகத்தை ஒட்டி வெளியிடப்பெற்றது இப்பதிப்பு. இது நல்ல முறையில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. viii. 526/1909/III.

Q2 : 38

361. i. கடிகாஜல ஸ்தல மகத்துவம் : கடிகாசல புராணம் ; ii. சி. பெருமாள் நாடார் ; சின்னைய நாடார் அச்சியந்திரசாலை, திருப்பத்தூர் ; iii. 1902 ; iv. உ.ப. 221 ; v. 14×11 செ.மீ.; vi. 0–4–0 ; vii. 'சோளங்கிபுரம் என்னும் கடிகாசல புராணம்' எனறும் இது குறிக்கப்பெறுகிறது. 22 அத்தியாயங்கள் கொண்டது. வசனநடையில் உள்ளது. viii. 163/1902/III.

Q2 : 38

கந்தசாமிக் கவிராயர், மு. ரா.

362. i. அரிமழத் தல புராணம் : மூலமும் குறிப்புரையும் ; ii. மு. ரா. சுப்பிரமணிய கவிராயர் ; விவேக பாநு அச்சியந்திர சாலை, மதுரை ; iii. 1907 ; iv. செ. மூ. உ. எ. 801; v. 22×14 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. 18 படலங்கள் கொண்டது இப்புராணம், குறிப்புரை ஈற்றில் அமைந்துள்ளது. viii. 55/1908/I.



Q2 : 38

கந்தசாமிப் பிள்ளை

363. i. பழனித்தலபுராண வசனம் [பழனித் திருப்புகழ்] : முதற் பதிப்பு ; ii. வித்தியா ரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1905 ; iv. உ.ப. 272 ; v. 16×12 செ மீ. ; vi. ...... ; vii. 23 சருககங்கள் கொண்டது ; பழனியின் தலச் சிறப்புக்களைப் பேசுவது. இதன் இறுதியில் பழனித் தலத்தைக்குறித்து அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் தரப் பட்டுள்ளன. viii. 11/1905/III.

Q2 : 38

கலியப்பெருமாள் பிள்ளை, எஸ்., தஞ்சை.

364. i. திருமழுவாடி புராண வசனம் ; ii. இந்தியா முத்திர சாலை ; iii. 1908 ; iv. உ.ப. 114+15 ; v. 21×14 செ.மீ.; vi. ...... ; vii. 'திருமழபாடி' என்னும் சிவத்தலம் பற்றிய புராணம். வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றது. பாகவ ஸப்தரிஷி சாஸ்திரிகளால் சுருக்கமாக மொழி பெயர்த்ததைக் கொண்டு இந்நூலாசிரியர் செம்மையான உரை நடையில் எழுதியுள்ளார். 24 அத்தியாயங்கள் உள்ளன. viii. 162/1908/III.

Q2 : 38

கலியாணசுந்தர முதலியார், பூவை.

365. i. சிந்தாமணித் தலபுராணம் ; ii. இராமசாமி முதலியார், திருவொற்றியூர் ; திரிபுரசுந்தரி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1910 ; iv. உ.ப. 24 ; v. 18×11 செ. மீ. ; vi. ..... ; vii. திருவொற்றியூரின் வடக்கே அமைந்தது சிந்தாமணி என்னும் இத்தலம். இதுபற்றிய புராண வரலாறு கூறுவது இந்நூல். நைமிசாரணியச் சருக்கம் முதலிய ஆறு சருக்கங்கள் உள்ளன. viii. 142/1910/II.

Q2 : 38

கவிராஜ நாயகம் பிள்ளை

366. i. திருச்சாய்க்காடென்னும் சாயாவன புராணம் ; ii. தெ. சி. துரைசாமிப்பிள்ளை, பெருந்தோட்டம் ; சண்முகசுந்தர விலாச அச்சுக்கூடம், சிதம்பரம் ; iii. ஜூலை, 1909 ; iv. உ.ப.+ செ.மு.ப. 6+84 ; v. 22×14 செ.மீ. ; vi. ...... ; vii. தேவா ரம் பெற்ற தலமாகிய சாய்க்காடு என்னும் சாயாவனம் தலம் பற்றியது ; பத்துச் சருக்கங்கள் கொண்டது. ஒவ்வொரு சருக் கம் பற்றியும் வசன நடையில் சருக்க சங்கிரகம் தரப்பெற்றிருக் கிறது. இத்தலம் பற்றிய தேவாரப் பாடல்கள் முதலில் தரப் பட்டிருக்கின்றன. இப்பதிப்பினைக் குறித்து இருவர் பாடிய இரண்டு சிறப்புப் பாயிரச் செய்யுட்கள் முதலில் உள்ளன. viii. 156/1909/III.

Q2 : 38

**கனகசபைக் கவிராயர், உடையார்பாளையம் சமஸ்தான வித்வான்.**

367. i. *திருப்புன்கூர்ப் புராணம்* ; ii. சண்முக சுந்தர விலாச அச்சுக்கூடம், சிதம்பரம ; iii. ஜூலை, 1907 ; iv. செ.மூ.எ. 855 ; v. 22×14 செ. மீ. ; vi. ...... ; vii. 23 படலங்கள் கொண்டது. ஒவ்வொரு சருக்க முடிவிலும் அந்தந்தச் சருக்கங்களின் சுருக்கம் உரை நடையில் உள்ளது. தருமபுரம் சண்முக சுவாமிகள் முதலிய பலர் சிறப்புப் பாயிரம் கொடுத்துள்ளனர். viii. 82/1907/III.

Q2 : 38

368. i. **காஞ்சி க்ஷேத்திர மஞ்சரி** [காமாக்ஷி லீலா பிரபாவம்] ; ii. கா. எ. ஆலால சுந்தரம் பிள்ளை ; வித்யா பாஸ்கர அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1906 ; iv. உ.ப. 38 ; v. 20×12 செ. மீ. ; vi. ...... ; vii. காஞ்சியில் உள்ள சிவ க்ஷேத்திரத்தைக் குறித்த பல செய்திகளும் திரட்டப்பெற்றன. இந்நூல் திருக்கைலாய பரம்பரை ஸ்ரீ காஞ்சீபுரம் ஞானப் பிரகாச தேசிக சுவாமிகள் ஆதீனம் மெய்கண்ட சிவாசாரியார் சந்தானம் ஞானபீடம் மஹா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானப் பிரகாச தேசிக சுவாமிகளின் கட்டளையால் இயற்றப்பெற்றது. ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலய வரலாறு முதற்கண் உள்ளது. காஞ்சி நகரில் எழுந்தருளியுள்ள திருமூர்த்தங்கள் பற்றிய வரலாறு அமைந்துள்ளது. viii. 326/1906/IV.

Q2 : 38

369. i. **காமநகர்ப் புராண வசனம்** ; ii. மூ சுந்தர முதலியார் ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. 1909 ; iv. செ. மூ. உ. ப. 64 ; v. 14×11 செ. மீ. ; vi. .... ; vii. காமக்கூர் என வழங்கும் காமநகர்ப் புராணத்தின் வசனம். காமக்கூர் மங்களக் கவிராயர் கந்தப்பபிள்ளை என்பார் எழுதிவைத்திருந்த ஏட்டுப் பிரதியைக் கொண்டு பதிப்பிக்கப்பெற்றது. பதினொரு சருக்கங்கள் உள்ளன. viii. 705/1909/IV.

Q2 : 38

**கிருஷ்ணசாமி பட்டர்**

370. i. "மாறு மதுரை" என்று வழங்கும் வானர வீர மதுரை மகாத்மியம் ; ii. தமிழ்ச்சங்க முத்திராசாலை ; iii. 1904 ; iv. உ. ப. 29 ; v. 22× 14 செ. மீ. ; vi. .. ; vii. 12 அத்தியாயங்கள் கொண்டது. ஸ்காந்த புராணத்தில் சனத்குமார ஸம்ஹிதையில் சொல்லப்பட்டுள்ளது இம் மகாத்மியம். இதன் தமிழ் மொழி பெயர்ப்பே இந்நூல். viii. 107/1904/II.

Q2 : 38

**கிருஷ்ணப்ப செட்டியார், குளத்தூர்.**

371. i. செல்வக் கந்தநாதர் தல புராணம் [சென்னை செல்வக் கந்தர் தோத்திர ஆசிரிய விருத்தம் முதலியன] ; ii. நடராஜாசாரியார், புதுவை ; ஹரிஹர பிரஸ், சென்னை ; iii. 1910 ; iv. செ. மூ. எ. 5+6+199 ; v. 18×11 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. சோமாசி குரு என்பார் பத்துப் பாட்டினுள் சுருக்கமாய்ச் சொன்ன சரிதையை ஆதாரமாகக் கொண்டு இப்புராணம் செய்யப்பெற்றது. திருப்போரூர் விளங்கும் கந்தன் சென்னை வந்து உறைந்ததாகவும், வணிகர் அப் பெருமானைப் போற்றி அறம் வளர்த்தவாறும் புராணகாரர் உரைக்கின்றார். தை மாதத்தில் கந்தச் சுவாமிக்கு நடைபெறும் பதினெட்டு நாள் உற்சவமும் அதை பரிபாலிப்பவர்கள் பெயர்களும் குறிக்கப் பட்டிருக்கின்றன. ஈற்றில் சென்னைச் செல்வக் கந்தர் தோத்திர ஆசிரிய விருத்தம் என்னும் துதி மாலையும், வேதாந்த கீர்த்தனங்களும், அலங்காரச்சிந்து ஒன்றும் இடம் பெற்றுள்ளன. viii. 327/1910/II.

Q2 : 38

**குமாரசாமித் தம்பிரான், வி., காசிவாசி.**

372. i. காசி கேதார மான்மியம் [ஸ்ரீ காசி மகாத்மிய சங்கிரகம்] ; ii. ரெயித்பி அண்டு கம்பெனி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1909 ; iv உ.ப. 59 ; v. 18×12 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. காசித் தலத்திற்கு ஆறு புராணங்கள் உள. அவற்றுள் அதிவீரராம பாண்டியர் காசி காண்டத்தையும், மகா வித்வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை காசி ரகசியத்தையும் வெளிப் படுத்தியுள்ளனர். ஏனைய நான்கில் ஒன்றாகிய காசி கேதார தலமான்மியம் சமஸ்கிருத சுலோகமும், தெலுங்கு அச்சரமுமா யிருந்ததையே மொழிபெயர்த்து இந்த ஆசிரியர் தருகிறார். 31 அத்தியாயங்களாக இத் தல புராணக் கதை உள்ளது. viii. 300/1909/IV.

Q2 : 38

i. காசி மகாத்மிய சங்கிரகம் (தொ. எ. 372 பார்க்க) ; ii. ரெயித்பி அண்டு கம்பெனி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1909 ; iv. உ. ப. 8 ; vii. காசித்தலத்தேயுள்ள 64 தீர்த்தங்கள் முதலிய விவரங்களைத் தருகிறது. காசி காண்டம் முதலிய விரிந்த நூல் பார்க்க இயலாதவர்க்கு எளிதில் அறியும் வண்ணம் எழுதப்பெற்றது. viii. 300/1909/IV.

Q2 : 38

**குமாரசாமி முதலியார், அ. க., திருப்பத்தூர்.**

373. i. கொரட்டை ஸ்தல மான்மியம் ; ii. சென்ட்ரல் அச்சியந்திர சாலை, திருப்பத்தூர் ; iii. 1910 ; iv. உ.ப.+செ.மூ.ப. 39 ; v. 21×14 செ.மீ. ; vi. ...... ; vii. 'வடமொழியில் தசாரணிய மென்ன வழங்கும் திருப்பத்தூர்ப் புராணத்துள் ஓர் பகுதியாகிய

சம்புவன ஜதூகபுரமெனும் கொரடடை ஸ்தல மான்மியம்' என்பது இதன் முழுப் பெயர். வடமொழிப் புராணத்தைத் தழுவித் தமிழில் பாடலாகவும், வசனமாகவும் இயற்றப் பெற்றது இந்நூல். viii. 736/1910/II.

Q 2 : 38

**கோபாலையர், அ.—மொ. து.**

374. i. திருக்கன்றுப்பூர்ப் புராணம் ; ii. தமிழ்ச் சங்க முத்திரா க்ஷரசாலை, மதுரை ; iii. 1903 ; iv. உ.ப. 35 ; v. 21×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. ஆலங்குடி அ. கோபாலையரால் ஸம்ஸ்கிருத புராணத்தினின்றும் வசன நடையில் மொழி பெயர்த்தது ; ஆறு படலங்கள் கொண்டது. viii. 159/1903/IV.

Q2 : 38

375. i. **கோயிலொழுகு**—முதற் பாகம் ; ii. ஆனந்தா முத்திராக்ஷர சாலை, சென்னை ; iii. 1909 ; iv. உ. ப. 138 ; v. 19×13 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. திருவரங்கம் பெரிய கோயில் நடவடிக் கைகளைக் குறித்தது. அனேக ஸ்ரீ கோசங்களைக் கொண்டு பண்டி தர்களால் பரிசோதிக்கப்பட்டது. தர்வ வர்மாவின் கைங்கரியம் தொடங்கி உத்தம நம்பிக்கும் பட்டர் திருமலாசார்யருக்கும் உண்டான கலவரம் வரையில் உள்ள செய்திகள் இம் முதல் பாகத்தில் அடங்கியுள்ளன. viii. 653/1909/IV.

Q2: 38

**சங்கரசுப்பிரமணிய பிள்ளை, செப்பறை.**

376. i. செப்பறை மான்மியம் [செப்பறை அழகிய கூத்தர் தோத்தி ராட்டகம், செப்பறை ராஜவல்லிபுரம் அகிலாண்ட நாயகி தோத்திரம்] : முதற் பதிப்பு ; ii. நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி ; iii. 1905 ; iv. உ.ப. 64 ; v. 20×13 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. பத்து அத்தியாயஙகளில் செப்பறையின் தல வரலாறுகளை உரைப்பது. இந்நூலோடு செப்பறை ஸ்ரீ அழகிய கூத்துடையார் தோத்திராட்டகமும், சிவஞான யோகிகள் செய்த அகிலாண்டநாயகி தோத்திரமும் இணைக்கப் பட்டுள்ளன. viii. 43/1906/I.

Q 2: 38

**சபாபதி செட்டியார், அ. சு.**

377. i. திருவாவினன்குடி என்னும் பழனி மான்மியம் ; ii. மூ. ஆவுடையப்ப பிள்ளை ; கிருஷ்ண விலாச அச்சாபீஸ், மதுரை ; iii. 1909 ; iv. உ.ப. 108 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-6-0 ; vii. திருவாவினன்குடி என ஆன்றோர் போற்றும் பழநிப் பதியின் சிறப்புக்களை எடுத்துக் கூறுவது. பாலசுப்பிர

மணியக் கவிராயர் எழுதிய பழநித் தல புராணம் கற்றோர்க் கேயன்றி ஏனையோர்க்கு எளிதில் வாசித்தறியக் கூடாமை கருதி வசன நடையில் இந் நூலை ஆசிரியர் இயற்றியுள்ளார். viii. 197/1909/III.

Q2 : 38

**சிதம்பர சுவாமிகள்**

378. i. மதுரை மான்மியம் ; ii. அ. சுந்தரநாத பிள்ளை & ம. அழகர்சாமி பிள்ளை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1908 ; iv. உ. ப. 96 ; v. 21×14 செ. மீ.; vi. ...... ; vii. மதுரையம்பதியில் சொக்கேசப் பெருமான் நிகழ்த்திய திருவிளையாடல்களை எல்லாம் தொகுத்துத் தருகின்றது. 68 திருவிளையாடல்கள் இதில் விளக்கி உரைக்கப்பட்டுள்ளன. பின்னர் 'கலியுகத்தின் அரசாட்சியும் விசேடங்களும்' என்னும் பகுதியில் பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்தார் விவரம், அக் காலத்து நிகழ்ந்த புதுமைகள் முதலியன பற்றி விவரிக்கின்றார். இப் பகுதியால் மதுரையின் சரித்திரம் புலனாகிறது. viii. 157/1908/IV.

Q2 : 38

**சிந்நயஞ் செட்டியார், தேவகோட்டை.**

379. i. திருவொற்றியூர்ப் புராணம் ; ii. அள. சித. பெ. சிதம்பரஞ் செட்டியார் ; ஸ்டார் ஆப் இந்தியா அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1901 ; iv. செ. மூ. எ. 898 ; v. 22×14 செ. மீ. ; vi. ..... ; vii. திருவொற்றியூரின் தலச் சிறப்புக் கூறுவது. பாயிரம் உட்படப் பன்னிரண்டு படலங்களைக் கொண்டுள்ளது. viii. 222/1901/IV.

Q2 : 38

**சிந்நய நாயகர், பௌராணிகர், திருவிசைநல்லூர்.**

380. i. திருக்கூவப் புராண வசனம் ; ii. கலாரத் நாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. 1910 ; iv. செ.மூ.உ.ப. 136 ; v. 17×12 செ.மீ.; vi. ...... ; vii. தொண்டை நாட்டுச் சிவத்தலங்கள் முப்பத்திரண்டில் ஒன்றாகிய கூவம் என்று வழங்கும் திருவிற் கோல க்ஷேத்திரத்தைப் பற்றிய புராண வரலாறு கூறுவது. இவ்வூரில் விற்கோலத்தோடு எழுந்தருளியிருக்கும் சுவாமி பெயர் திரிபுராந்தகேசுரர் ; அம்மையார் பெயர் திரிபுராந்தகியம்மை. துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய செய்யுட் புராணத் தைப் பின்பற்றி எழுதப்பெற்றது. பாயிரம் செய்யுளில் உள்ளது. நைமிசாரண்ய சருக்கம் முதல் தாருகன்வதைச் சருக்கம் ஈறாக ஏழு சருக்கங்கள் கொண்டுள்ளது. viii. 24/1910/IV.

Q2 : 38

**சீவலமாற பாண்டியர் & முத்துவீரக் கவிராயர்**

381. i. சங்கா நாராயணசாமி கோயில் புராணம் : இரண்டாம் பதிப்பு ; ii. என். வ. வி. சோமசுந்தரம் பிள்ளை & வி. திருவேங் கடம் பிள்ளை ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1909 ; iv. உ.ப.+செ.மூ.ப. 142 ; v. 21×12 செ.மீ. ; vi. ...... ; vii. இத்தலம் பற்றிய வடமொழிப் புராண சரிதத்தைப் பின்பற்றி சீவலமாற பாண்டியர் தமிழில் பாடினர். இவர் பாடாதொழிந்த நதி, நாடு, நகர, தல, தீர்த்த, மூர்த்தி, விசேடங்கள் பற்றி ஆறு சருக்கங்களும், கடவுள் வாழ்த்து, புராண வரலாறுக் கவிகள் ஐந்தும், முத்துவீரக் கவிராயர் இயற்றியுள்ளார். இதற்கு மதுரைத் தமிழ்ச் சங்கப் பரிசோதகர் மு. ரா. அருணாசல கவிராயர் எழுதிய அரும்பத உரையும் சுருக்க வசனமும் உடன் தரப்பட்டிருக்கின்றன. viii. 198/1909/III.

Q2 : 38

**சுந்தர முதலியார், மு., காமக்கூர்.**

382. i. சிவாலயக் கோவை : இரண்டாம் பதிப்பு ; ii. சின்னப்பா முதலியார் ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. 1909 ; iv. செ.மூ.ப. 8 ; v. 14×11 செ.மீ.; vi....... ; vii. சிவ பூஜை, சிவ தரிசனம் முதலிய காலங்களில் துதிக்கும் பொருட்டு சமயாசாரியர்களால் பாடப்பெற்ற சிவத்தலங்களை கோவைப் படுத்திக் கவி இயற்றியுள்ளார். உமாபதி சிவாசாரி யர் பாடிய 'திருப்பதிக் கோவை' போன்றது. viii. 129/1909/IV.

Q2 : 38

**சுப்பிரமணியபிள்ளை, த., வடக்குப்பட்டு.**

383. i. சிவஸ்தல மஞ்சரி ; ii. மிமோரியல் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1905 ; iv. உ.ப. 120 ; v. 22×14 செ. மீ. ; vi. ...... ; vii. பாடல் பெற்ற தலங்கள், வேறு சில தலங் கள் ஆகியவற்றின் விவரம் உரைப்பது. தலங்களுக்குச் செல்லும் வழி, தலம் மூர்த்தி தீர்த்த விவரம் முதலியன உரைப்பது. viii. 265/1905/ /III.

Q2 : 38

**சுவாமிநாத உபாத்தியாயர், தி.மு.**

384. i. திருக்களர் சார சங்கிரகம் ; ii. எட்வர்ட் அச்சுக்கூடம், திரு வாரூர் ; iii. 1910 ; iv. உ.ப. 62 ; v. 17×13 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. சோழ நாட்டில் காவேரிக்குத் தெற்கிலேயுள்ள சிவதலங்களில் இது ஒன்று. சமய குரவர் திருப்பாடல்கள் பெற்ற தலம். இந்நகரம் பற்றிய புராண சரிதமும், கோயில் திருப்பணி விவரம் முதலியனவும் பற்றி உரைப்பது. viii. 602/1910/IV.

Q2 : 38

**செங்கய்யா கேஸாநபல்லி**

385. i. வேங்கடாசல யாத்திரை ; ii. வாணி பூஷணம் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1909 ; iv. உ.ப. 79 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. திருப்பதி என்னும் திருவேங்கட மலைக்குச் சென்று, வேங்கடேசனைத் தரிசிக்க வருவோருக்கு உபயோகமாக இயற்றப்பெற்றது. நான்கு அத்தியாயங்கள் உள. இவற்றுள் முறையே வேங்கடேசுவரர் சரித்திரம், வேங்கடாசலத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்கள், சுவாமிக்கு நடக்கும் ஆராதனை, உற்சவம் முதலியன பற்றிய விவரம் திருப்பதியிலும் திருச்சானூரிலும் உள்ள முக்கிய தேவாலயங்களின் சரித்திரங்கள், வேங்கடேசரின் திருக்கோலங்கள், தோத்திரங்கள் ஆகியவை அடங்கியுள்ளன. viii. 247/1909/III.

Q2 : 38

**செங்கல்வராயபிள்ளை, வ.சு.**

386. i. காசி மாஹாத்மியம் ; ii. எம். வி. நாயுடு அண்டு கம்பெனி, சென்னை ; iii. 1906 ; iv. உ.ப.+செ.மூ.ப. 35 ; v. 19×13 செ.மீ. ; vi. ...... ; vii. 'காசி மாஹாத்மியம் அல்லது சிம்ஹத்வஜன் கதை' என்பது இதன் முழுப் பெயர். இராமநுஜ எழுத்தச்சன் என்பவர் மலையாள மொழியில் செய்துள்ள சிவ புராணத்தினின்று எடுக்கப்பெற்றது, இச் சரித்திரம். இதனால் காசித் தலத்தின் மேன்மையும், கங்கையின் சிறப்பும், சிவபிரானது வள்ளன்மையும் நன்கு விளங்கும். viii. 359/1906/III.

Q2 : 38

**சொக்கலிங்க செட்டியார்**

387. சித்த வட மான்மியம் ; ii. பிரஸிடென்ஸி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1905 ; iv. செ.மூ.எ. 388 ; v. 16×13 செ.மீ. ; vi. ...... ; vii. சித்தவடம் என்னும் தலம் திருநாவுக்கரசர் தேவாரத்தில் அதிகைப் பதிகத்துள் சுட்டப்பெறுகிற வைப்புத்தலம். இத் தல மான்மியம் கூறுவது இப்புராணம். பாயிரம் உட்பட 5 சருக்கங்களைக் கொண்டது. இறுதியில் ஆதி சிதம்பரேசர் பதிகம் (10), சிவகாமியம்மை பதிகம் (10) திருத்தொண்டர் பதிகம் (11) ஆகிய மூன்றும் உள்ளன. viii. 318/1905/II.

Q2 : 38

388. i. சூதவன புராணம் ; ii. தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. 1905 ; iv. உ. ப. + செ. மூ. ப. 52+1520 ; v. 22×14 செ.மீ. ; vi. .. ... ; vii 'திருவெசாத்தனம்' எனப் பெறும் சூதவனத்தின் தல மகிமை உரைப்பது. இவ்வூர் தஞ்சை மாவட்டத்தில் திருத்துறைப் பூண்டித் தாலுகா முத்துப்பேட்டை இரயில்வே நிலையத்தின் பக்கலில் உள்ளது.

பன்னிரண்டு சருக்கங்கள் கொண்டது இப்புராணம். இப்புராணத்தின் வசனமும் இதன் பிற்பகுதியில் உள்ளது. இவ்வூர் வடமொழிப் புராணத்தையும், முற்பட்ட சருக்கமான தமிழ்ப் புராணததையும், பின்பற்றி விரிவாக பாடப்பெற்றது. viii. 214/1906/I.

Q2 : 38

**ஞானப்பிரகாச தேசிகர், கமலை.**

389. i. திருமழுவாடிப் புராணம் ; ii. உலகநாத பிள்ளை, தஞ்சை ; வித்தியா விநோதினி முத்திராசாலை, தஞ்சை ; iii. 1908 ; iv. செ.மூ.ப. 143 ; v. 16×12 செ.மீ. ; vi. ...... ; vii. திருமழபாடி என்னும் தலத்திற்குரிய புராணம். 'மழுவைப் புராணம்' என்றும் இதற்குப் பெயர் உண்டு. ஏழு சருக்கங்கள் கொண்டது. இத்தலம் பற்றி மூவர் பாடிய தேவாரங்களும் ஈற்றில் தரப்பெற்றிருக்கின்றன. இப் புராணத்தின் மொத்தம் செய்யுள் தொகை 610-ல் இப்பொழுது கிடைத்துள்ளவை 581 பாடல்களே. viii. 26/1908/IV.

Q 2 : 38

**தணிகாசல முதலியார், பா.**

390. i. திருக்கழுக்குன்ற புராணச் சுருக்கம் ; ii. கலியாணசுந்தர முதலியார், பூவை ; கிளாஸ்டன் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1910 ; iv. உ.ப 16 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–0–6 ; vii. திருக்கழுக்குனறம் தலத்தின் பழைய வரலாறு. காருடச் சருக்கம் முதலிய சில சருக்கங்கள் கொண்டது. இது இந்நூலின் முதல் பாகம் ஆகும். viii. 84/1910/III.

Q2:38

391. i. திருவானமியூர்ப் புராண வசன சுருக்கம் : முதல் பாகம் ; ii. கலியாணசுந்தர முதலியார், பூவை ; கிளாஸ்டன் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1910 ; iv. உ.ப. 16; v. 13×11 செ.மீ.; vi. 0–0–6 ; vii. திருவான்மியூர்ப் புராணம் வசன நடையில் சுருக்கமாக உள்ளது. இதில் ஏழு படலங்கள் உள. இனிமேல் வெளியிடப்பெறும் இரண்டாம் பாகத்தில் அடங்கிய 7 படலங்களின் விவரமும் இதன் இறுதியில் தரப்பெற்றிருக்கிறது. viii. 726/1910/I.

Q2 : 38

**திரிகூடராசப்பன் கவிராசமூர்த்தி, மேலகரம்.**

392. i. திருக்குற்றாலததல புராணம் ; ii. விவேகபாநு அச்சியந்திர சாலை, மதுரை ; iii. 1910 ; iv. செ. மூ எ. 2072 ; v. 22×14 செ. மீ. ; vi. 1–8–0 ; vii. திருக்குற்றாலம் எனபது பாண்டிய நாட்டுச் சிவத்தலங்கள் பதினான்கில் ஒன்று. இத்தலம்பற்றிய புராணம் இலக்கிய நயம் செறிந்த ஓர் புராணம் ஆகும். இது



தானவைபவ காண்டம், சிவ ரகசிய காண்டம் என இரண்டு காண்டங்களும், 32 சருக்கங்களும் கொண்ட பெரிய நூலாகும். இதற்கு மதுரைத் தமிழ்ச் சங்கம் நூற்பரிசோதகர் மு. ரா. அருணாசலக் கவிராயர் அரும்பதவுரை எழுதியுள்ளார். நூலாசிரியர் திரிகூடராசப்பக் கவிராயரின் வாழ்க்கை வரலாறு முதலில் தரப்பெற்றிருக்கிறது. viii. 253/1910/IV.

**Q2 : 38**

393. i. **திருக்கோவலூர்ப் புராணம்** ; ii. சௌந்தரராஜ உடையார் ; லார்ட் ரிப்பன் யந்திரசாலை, கும்பகோணம் ; iii. 1901 ; iv. செ.மூ.ப 1725 ; v. 20×13 செ. மீ. ; vi. ...... ; vii. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. பாயிரம் உட்பட 26 சருக்கங்களைக் கொண்டது. இந்தப் புராணத்தின் சிறப்புக்கள் முதலியன பற்றிய குறிப்புக்கள் நூல் முகப்பில் உள்ளன. viii. 35/1902/IV.

**Q2 : 38**

394. i. **திருவாலவாயுடையார் திருப்பணி மாலை** ; ii. பொ. பாண்டித்துரைத் தேவர்; மதுரைத் தமிழ்ச் சங்க முத்திரா சாலை, மதுரை; iii. 1909 ; iv. செ. மூ. எ. 106 ; v. 21×14 செ. மீ.; vi. 0–3–0 ; vii. மதுரைக் கோயிலில் திருப்பணி செய்தார் விவரங்கள் முதலியன தெரிவிப்பது. இதனோடு மதுரைத் தல வரலாறு, என்னும் உரைநடைப் பகுதியும் அச்சிடப்பட்டிருக்கிறது. இதுவும் பழம் பிரதியிலிருந்து பதிப்பிக்கப்பெற்றதே. viii. 203/1909/II.

**Q2:38**

395. i. **திருவேற்காட்டுப் புராணம்** ; ii. கலியாணசுந்தர முதலியார், பூவை, அஷ்டாவதானம்; பண்டிதமித்திர யந்திரசாலை, சென்னை; iii. 1903 ; iv. செ.மூ.எ. 1055; v. 24×16 செ.மீ.; vi. 0–8–0 ; vii. 'வட வேதாரணியம்' என்னும் திருவேற்காட்டுப் புராணம், என்பது இதன் முழுப் பெயர். பாயிரம் உட்பட பதினைந்து சருக்கங்கள் கொண்டது. viii. 8/1905/I.

**Q2 : 38**

**துரைசாமி அய்யர், எஸ்., திருநெல்வேலி.**

396. i. ஜெயந்திபுரமென்னும் திருச்செந்தூர் ஸ்தல புராண ஸங்கரஹம்; ii. வாணி விலாசம் பிரஸ், திருநெல்வேலி; iii. 1910 ; iv. உ.ப. 73 ; v. 17×11 செ. மீ.; vi. 0–3–0 ; vii. இச்சிறிய வசன புராணம் பற்பல கிரந்தங்களிலிருந்தும் சுருக்கமாக எழுதி அச்சிற் பதிப்பிக்கப் பெற்றது. இவ்வூரின் செய்யுட் புராணம் பாடியவென்றி மாலைக் கவிராஜர் சரித்திரம் முதலில் தரப்பெற்றிருக்கிறது மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றன் மகிமையையும் மிகச் சுருக்கமாக உரைப்பது. viii. 336/1910/III.



**Q2 : 38**

**கோகலே, கோபாலகிருஷ்ண:**

686. i. பிரஸிடென்ஸியல் அட்ரெஸ் [தலைமை உரை] ; ii. சுதேசமித்திரன் பிரஸ் ; iii. 1905 ; iv. உ.ப. 68; v. 19×13 செ.மீ.; vi. 0–6-0; vii. 1905-ஆம் வருஷம் டிசம்பர் மாதத்தில் காசியில் கூடிய 21-வது இந்தியன் நாஷனல் காங்கிரஸ் மகா சபையில் அக்கிராசனம் வகித்த கனம் கோபாலகிருஷ்ண கோகலே செய்த தலைமைச் சொற்பொழிவின் தமிழ் மொழிபெயர்ப்பு இந்நூல். viii. 341/1906/I.

W.44

**சங்கரலிங்கம் பிள்ளை, அ.**

687. i. காங்கிரஸ் மகாசபை; ii. வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார்; வி. என். ஜூபிலி பிரஸ், சென்னை ; iii. 1901 ; iv. உ.ப. 23+107; v. 19×13 செ.மீ; vi. 0-8-0; vii. 15–16 ஆம் காங்கிரஸ்களின் நடவடிக்கைகள் அடங்கியுள்ளன. இந்நூலின் ஆசிரியர் சுதேசமித்திரனின் உதவிப் பத்திராதிபராவர். viii. 61/1902/I.

W.44

**சுந்தரையர், வி.**

688. i. ராஜ்ய பரிபாலனமும் தேசாபிமானமும் ; ii. ஸ்ரீநிவாஸவரதாசாரி, சென்னை; எஸ். வி. அண்டு கம்பெனி ; iii. 1908 ; iv. உ.ப. 19 ; v. 21×14 செ.மீ.; vi.... ; vii. ராஜ்ய பரிபாலனம் பற்றியும் தேசாபிமானம் பற்றியும் விவரிப்பது. viii 436/1908/III.

W.44

**நடேச பிள்ளை, மாயவரம்.**

689. i. சுதேசியவுணர்ச்சியும் அன்னியச் சாமான் விலக்கலும் ; ii. சண்முகம் அண்டு கம்பெனி ; மகாலட்சுமி விலாச அச்சுக்கூடம்; iii. 1907 ; iv. உ.ப. 126 ; v. 18×11 செ.மீ.; vi. 0-5-0 ; vii. சுதேசியம் பற்றிப் பலரும் அறியும் வண்ணம் எழுதப் பெற்றது. அன்னியப் பொருள்களை விலக்குவதன் அவசியம் பற்றியும் கட்டுரைக்கின்றார். viii. 200/1907/III.

W.44

**பரமஹம்ஸ பால சுப்பிரமண்ய பிரம்மசுவாமி**

690. i. காங்கிரஸ் கீதை; ii. பரமஹம்ஸ பால சுப்பிரமணிய பிரம்ம சுவாமி ; ஆனந்தா அச்சுக்கூடம், சென்னை ; iii. 1908 ; iv. உ.ப.+செ.மு.ப. 46; v. 10×7 செ.மீ.; vi....; vii. சூரத்தில் நடைபெற்ற காங்கிரஸ் மகா சபையின் 23-வது கூட்டத் தொடரைப் பற்றியது. இங்கிலாந்து கவர்மெண்டார் பேப்பர் என்ற சஞ்சயன் மூலமாகத் தெரிந்துக் கொள்வதாகப் பாடப் பெற்றது. viii. 118/1908/I.

W.44

**பானர்ஜி, சுரேந்திரநாத் முதலியோர்.**

691. i. சுதேசியமும் சுதந்திரமும் ; ii. சுதேசமித்திரன் ப்ரஸ், சென்னை ; iii. 1907 ; iv. உ.ப. 164; v. 18×13 செ.மீ; vi. 0–8–0; vii. பாபு சுரேந்திரநாத் பானர்ஜி, பால கங்காதர திலகர் முதலிய தேச பக்தர்கள் செய்த பிரசங்கங்களின் கோவை. ஆங்கில மூலத்திலிருந்து தமிழாக்கம் பெற்றது. viii. 86/1908/II.

W.44

**விஸ்வநாத அய்யர், வி. எஸ்.**

692. i. பாண்டவர்களின் இராஜாங்க முறைமை ; ii. எட்வர்டு பிரஸ், திருவாரூர்; iii. பிப்ரவரி, 1910; iv. உ.ப. 12; v. 19×12 செ.மீ.; vi. . . . ; vii. பாண்டவர் நாளில் நிலவிய அரசியலின தன்மைகளை எடுத்துரைப்பது. பாரதக் கதை நிகழ்ச்சிகளிலிருந்து எடுத்து எழுதப் பெற்றது. இது எழுதிப் படிக்கப்பெற்ற சொற்பொழிவுக் கட்டுரை. viii. 650/1910/I.

W.44

## 330—பொருளாதாரம்

### 332·4—பணம்

**இரத்தினசபாபதி அடியார், சி., கூடலூர்.**

693. i. சிக்கன நூல்—அஃது பணஞ் சேர்க்கும் வழி ; ii. ஸ்வாமி நாதன் பிரஸ், சென்னை; iii. 1906 ; iv. உ.ப. 3+22 ; v. 18×12 செ.மீ.; vi. 0-2-0 ; vii. பணத்தைச் சிக்கனமாகச் செலவு செய்து சேமித்து வைக்கவேண்டும் என்பதை நூலாதாரங்கள் பல காட்டி விளக்குகின்றது. viii. 1/1906/III.

X61

### 338·0954—தொழில் முறை

**ஸ்ரீநிவாஸ ஐயங்கார், டி. ஆர்.—மொ. து.**

694. i. இந்தியக் கைத்தொழில் முயற்சி ; ii. டி. கோதண்டராம ஐயங்கார் ; கல்யாண சுந்தரம் பவர் பிரஸ், தஞ்சை ; iii. ஜூன், 1907 ; iv. உ. ப. 215 ; v. 19×13 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. கிலின் பர்லோ என்பவர் எழுதிய "இண்டஸ்டிரியல் இந்தியா" என்னும் நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு. இளைஞரும் முதியோரும் தெரிந்துகொள்ள வேண்டிய பல செய்திகள் இதில் உள்ளன. பத்து அத்தியாயங்கள் கொண்டது. viii. 140/1907/III.

X

## 342·42—இங்கிலாந்து அரசியல்

**ரெங்கசாமி அய்யர், எம். வி., மதுரை.**

695. i. ஆங்கில அரசியல் ; ii. விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1909 ; iv. உ. ப. 175 ; v. 16×12 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. எலிமெண்டரி வகுப்புக்களுக்காக இயற்றப் பெற்றது. 'ஸிவிக்ஸ்' அல்லது ஆங்கில அரசியல் பற்றிய புதிய பாடத்திற்காக இயற்றப்பெற்றது. 19 அத்தியாயங்களில் தேசத்தின் ஆட்சி முறையை விளக்குகிறது. viii. 346/1909/II.

W. 61

696. i, ஆங்கில அரசியல்—இரண்டாம் பாகம் ; iii. 1909 ; iv. உ. ப. 93—175 ; v. 16×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. ஆங்கிலேயர் தேசத்தைப் பல இலாகாக்கள் மூலம் ஆண்டு வந்த முறைமையினையும், அந்தந்த இலாகா செய்து வந்த வேலையையும் விவரித்து உரைக்கின்றது. இதில் 9-ம் அத்தியாயம் காட்டிலாகா தொடங்கி 19-ம் அத்தியாயம வியாபாரமும் கைத்தொழிலும் வரையில் 11 அத்தியாயங்கள் உள. viii. 470/1909/II.

W.561

697. i. ஆங்கில அரசியல் : இரண்டாம் பதிப்பு ; iii. 1910 ; iv. உ. ப. 196 ; v. 16×12 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. இந்தியாவில் ஆங்கில துரைத்தனத்தார் செய்த அரசியல் முறைமை பற்றி விவரிக்கும் நூல். பல்வேறு இலாகாக்கள் பற்றியும் அவற்றின் தொழில் முறை முதலியன பற்றியும் விளங்க உரைக்கின்றது. பொதுமக்கள் தெரிந்துகொள்ள வேண்டிய முக்கியமான செய்திகள் பல இதில் உள்ளன. viii. 537/1910/II.

W.561

## 343·0954—கிரிமினல் சட்டம்

i. **அடிதண்டனை ஆக்ட்—1864-ம் வருடத்து 6-வது ஆக்ட்** (தொ. எ. 698 பார்க்க) : இரண்டாம் பதிப்பு ; iii. 1904 ; iv. உ. ப. 7 ; vii ...... ; viii. 150/1905/I.

Z44,7,15

i. **இந்தியன் பீனல் கோட்—1860-ம் வருடத்து 45-வது ஆக்ட்** (தொ. எ. 698 பார்க்க): இரண்டாம் பதிப்பு ; iii. 1904; iv. உ. ப. 183 ; vii. 23 அத்தியாயங்கள் உள்ளன. அடிக்குறிப்பாகப் பல விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. viii. 150/1905/I.

Z44,7,15

i. இந்து தேசத்து சாட்சி ஆக்ட்—1872-ம் வருடத்து 1-வது ஆக்ட் (தொ. எ. 698 பார்க்க) : இரண்டாம் பதிப்பு ; ii. பாலு சகோதரர்கள் ; ஷாம்ராக் அச்சுககூடம், சென்னை ; iii. 1904 ; iv. உ. ப. 77 ; vii. 11 அத்தியாயங்கள் உள. viii. 150/1905/I.

Z44, 7,15

698. i. கிரிமினல் கோட் கிரிமினல் புரோஸிஜர் கோட் போன்ற சட்டங்கள் : இரண்டாம் பதிப்பு ; ii. பாலு சகோதரர்கள் ; ஷாம்ராக் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1904 ; iv. உ. ப. 4+663+7 ; v. 25×16 செ. மீ. ; vi. 5-0-0 ; vii. நான்கு பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுக் கிரிமினல் சட்டங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 150/1905/I.

Z44, 7, 15

i. கிரிமினல் புரோஸிஜர் கோட் (தொ. எ. 698 பார்க்க) : இரண்டாம் பதிப்பு ; iii. 1904 ; iv. உ. ப. 216+145+35 ; vii. 46 அத்தியாயங்கள் உள. பிற்பகுதி ஷெட்யூலில் பல சட்ட திட்டங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 150/1905/I.

Z44, 7, 15

கிருஷ்ணமாச்சாரியார், கே. ஆர்.

699. i. கிரிமினல் வியவஹார சங்கிரஹம் : முதற் பதிப்பு ; ii. தாம்ஸன் கம்பெனி ; மினர்வா ப்ரஸ், சென்னை ; iii. 1909 ; iv. உ. ப. 388 ; v. 25×17 செ. மீ. ; vi. ........ ; vii. இதில் இந்தியன் பீனல் கோட், கிரிமினல் புரோஸிஜர் கோட், சாட்சியச் சட்டம், அடிதண்டனை ஆக்ட்டு, சிறுவர்களைச் சீர் திருத்துவதற்கான ஆக்ட்டு, முதலியவைகளும் ஜெயில் ரூல்கள் பிராதுகள், மனுக்கள் இவைகளுக்கெல்லாம் மசோதாக்களும் அடங்கியுள்ளன. தமிழ் மட்டும் தெரிந்தவர்கள் கிரிமினல் சட்டங்கள், கோர்ட்டு நடவடிக்கைகள் முதலியவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் இயற்றப்பெற்றது. viii. 35/1909/II.

Z44, 7, 15

சர்மா, எஸ். கே., பாலக்காடு.

700. i. புதிய சிவில் ப்ராக்டிஸ் என்னும் புதிய ஸிவில் ப்ரொஸிஜர் கோட் : முதல் பதிப்பு ; ii. பிரண்ட்ஸ் அஸோஸியேசன் லிமிடெட், கோயம்புத்தூர் ; iii. 1909 ; iv. உ. ப. 123 ; v. 22×14 செ. மீ. ; vi. 0-12-0 ; vii. இது 1908-வது வருஷத்திய 5-வது நம்பர் ஆக்ட். பழைய ப்ரொஸிஜர் கோட் செக்ஷன்களுடன் தமிழில் தயாரிக்கப்பட்டது இந் நூல். viii. 139/1909/II.

Z44,7, 15

## 347·2—நில உரிமை

**சுப்பிரமணியய்யர், வி.**

701. i. நில ஆக்ரமிப்பு சட்டம்—சென்னை 1905 வருடத்து 3-வது ஆக்ட்; ii. சென்ட்ரல் பிரஸ், ஈரோடு; iii. 1908; iv. உ. ப. 38; v. 21×14 செ. மீ.; vi. 0–4–0; vii. சர்க்கார் நிலத்தைப் பிறர் ஆக்கிரமிப்பதிலிருந்து தடுப்பதற்காக ஏற்பட்டது இச் சட்டம். சட்டங்களைக் குறித்து வியாக்கியானமும் தரப்பெற்றிருக்கிறது. viii. 167/1908/III.

Z 44,2

## 347.6—இந்து சட்டம்

**அப்பண்ணு சாஸ்திரி, ஸி. பி., உடுமலைப்பேட்டை.**

702. i. ஹிந்து லா; ii. என். கே. எஸ். பிரஸ், ஈரோடு; iii. 1905; iv. உ. ப. 218; v. 21×14 செ. மீ.; vi. 1–?–0; vii. ஹிந்துக்களின் குடும்ப முறை சொத்து, சுதந்திரம் முதலியவைகளைப் பற்றிய சட்டங்களைத் தொகுத்து உரைப்பது. இதில் விவாகம், சந்தானம், சுவீகாரம், பிதுரார்ஜித சுயார்ஜித வகைச் சொத்துக்கள், தாயபாகம், ஜீவனும்சம் முதலியவற்றைப் பற்றி செய்திகளை விவரிப்பது. 17 அத்தியாயங்கள் கொண்டது. viii. 173/1905/IV.

Z44, 2

## 349·54—இந்தியச் சட்டம்

**சங்கர நாராயண பிள்ளை, பி என்., பரமக்குடி.**

703. i. குடிச் சட்ட விளக்கம்; ii. ரங்கநாதம் அண்டு பிரதர்ஸ் பிரஸ்' மதுரை; iii. 1908; iv. உ. ப. 50; v. 21×14 செ. மீ.; vi. 0–8–0; vii. சென்னபட்டணம் பூஸ்திதிகளிலுள்ள 1908-ம் வருஷத்து 1-வது ஆக்ட் யாவருக்கும் நன்ருய் விளங்கும்படி எழுதப் பெற்றது. இது 17 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு விளக்கம் தரப்பெற்றிருக்கிறது. viii. 349/1909/III.

Z44

704. i. தமிழ் ரிவின்யு சட்ட தீபிகை; ii. எம். எல். வி. பிரஸ், சென்னை; iii. 1909; iv. உ. ப. 116; v. 21×14 செ. மீ.; vi. 1–0–0; vii. சென்னை ராஜதானியிலுள்ள கிராம முனிசீப்பு, மணியக்காரர், கர்ணம் முதலிய ரிவின்யூ உத்தியோகஸ்தர்களுக்கும் ரயத்வாரி மிராசுதார், ஜமீன்தார், மிட்டாதார், இனும்தார், சுரோத்திரியம்தார், பாளையம்தார் முதலியவர்களுக்கும் கிராம உத்தியோக பரீக்ஷை கொடுப்பவர்களுக்கும் சகல பூஸ்திதியுடையவர்களுக்கும் உபயோகமாகும்படி இயற்றப்பட்டது. 1822-ம் வருடத்து 9-வது ஆக்டு தொடங்கிப் பத்துப் பகுதிகளாக இது உள்ளது. viii. 691/1909/III.

Z44

**நடேச பிள்ளை, ஏ., திருவாரூர்.**

705. i. இந்து குடும்ப கடன்கள் ; ii. எட்வர்ட் அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. 1904 ; iv. உ. ப. 70 ; v. 21×15 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. இந்துக்கள் தங்கள் சொத்துக்களை வீண் விவகாரங்களில் செலவிடாதிருக்க வழி காட்டுவது. இந்து குடும்பக் கடன்களைப் பற்றியும், அநேக ஜாரியான தீர்ப்புகள் பற்றியும் எடுத்துரைப்பது. viii. 181/1904/II.

Z44

706. i. இந்து தர்மகர்த்தா ; ii. விக்டோரியா பாண்டியன் அச்சுக்கூடம், ஆணிக்காரன் சத்திரம் ; iii. 1904 ; iv. உ. ப. 42 ; v. . . . . . . . . ; vi. 0-4-0 ; vii. இந்துக்களின் தேவாலயங்கள், மடங்கள், சத்திரங்கள் முதலியவற்றின் சொத்துக்களைப் பரிபாலிப்பதற்காக ஏற்பட்டிருக்கும் தருமகர்த்தாக்கள் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகள் அடங்கியுள. 1863-ம் வருட 20 ஆக்ட் விவரமும், சென்னை, பம்பாய், அலகாபாத், கல்கத்தா முதலிய ஹைகோர்ட்டுகளில் ஏற்பட்டிருக்கும் தீர்மானங்களும் சுருக்கித் தமிழில் புத்தக வடிவில் தரப்பட்டுள்ளது. viii. 145/1904/I.

Z44

**மகாலிங்க ஐயர், ஏ., தஞ்சாவூர்.**

707 i. 1902-ம் வருஷத்திய சிவில் விவகார விஷயங்களில் அனுசரிக்கவேண்டிய விதிகள் [இங்கிலீஷ் பாஷையிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது] ; ii. செயிண்ட் ஜோசப்ஸ் காலேஜ் பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. 1903 ; iv. உ. ப. 25+122+104 ; v. 21×14 செ மீ. ; vi. 1-8-0 ; vii. சிவில் விவகாரம் பற்றிய சட்டம் ஆங்கில மொழியினின்றும் மொழி பெயர்த்துத் தரப் பெற்றுள்ளது. அனுபந்தப் பகுதியில் பல நமூனக்கள் முதலியன இடம் பெற்றுள்ளன. viii. 100/1903/III.

Z44

**முத்துசாமி அய்யர்**

708. i. விவகார தீபிகை [சிவில்] ; ii. ஸ்ரீ நிகேதன முத்திராக்ஷர சாலை ; iii. 1903 ; iv. உ. ப. 96+35 ; v. 21×14 செ. மீ. ; vi. . . . . . . . . : vii. ஸ்டாம்பு விஷயங்கள், ரிஜிஸ்டர் விஷயங்கள், கோர்ட்டு கட்டணத்தைக் குறித்த விஷயங்கள், கால நிர்ணய சட்ட விஷயங்கள், இன்கம்டாக்ஸ் ஆக்ட், நிவிர்த்தி சம்பந்தமான கடன்களைக் குறித்த விஷயங்கள் என்னும் செய்திகள் உள்ளன. அனுபந்தமாக மாதிரி நமூனக்கள் பலவும் தரப்பட்டுள்ளன. viii. 259/1903/II.

Z44

709. i. விவகார தீபிகை [சிவில்] ; iii. நவம்பர், 1905 ; iv. உ. ப. 115 ; viii. 181/1905/IV.

Z44

**710.** i. லா ரிப்போர்ட் & வேதாந்தம்—[பிரம வித்தை] ; ii. பாதர் அண்டு கோ., மதுரை ; பி.வி.பி. பிரஸ், சென்னை ; iii. 1910 ; iv. உ.ப. 147 ; v. 14×11 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. ஹைகோர்ட்டுகளில் நீதிபதிகள் செய்யும் தீர்மானங்களும், சீமையிலுள்ள பிரிவி கவுன்ஸிலில் செய்யப்பெறும் தீர்மானங்களும், அப்போதைக்கப்போது அரசாங்கத்தார் செய்யும் சட்டங்களும் மற்றும் சட்ட சம்பந்த விளக்கங்களும் கொண்டது இந்தச் சட்டப் பத்திரிகை. இதனோடு வேதாந்தம் பற்றிய ஒரு பகுதியும் உள்ளது. viii. 570/1910/IV.

Z44

**லோகநாதன், எம்.ஏ., தொ.து.**

**711.** i. சிவில் கிரிமினல் சட்ட மஞ்சரி [வால்யம் 1] ; ii. மெஸ்ஸர்ஸ் என். ராதாகிருஷ்ண அண்டு கோ., மினர்வா அச்சியந்திரசாலை ; iii. 1907 ; iv. உ.ப. 162 ; v. 22×14 செ.மீ. ; vi. .... ; vii. ஏழு அத்தியாயங்களில் அரசியலாரின் பல சட்டங்கள் தொகுத்துக் காட்டப்பெற்றுள்ள நூல். பொது மக்களும் தெரிந்துகொள்ளும் வகையில் பல உதாரணங்கள் காட்டிச் சட்டங்கள் விளக்கப்பட்டுள்ளன. viii. 201/1907/IV.

Z44

**வில்வபதிச் செட்டியார், தி.சி., இராயவேலூர்.**

**712.** i. வாய்ப்பூட்டுச் சட்ட மறுப்பு ; ii. தி.சி. வில்வபதி செட்டியார் ; சுதேசமித்திரன் ப்ரஸ், சென்னை ; iii. 1908 ; iv. உ.ப. 80 ; v. 17×12 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. அரசாங்கத்தார் இயற்றியுள்ள 'வாய்ப்பூட்டுச் சட்டத்தின்' விளைவுகள் பற்றி விளக்குவது. இச் சட்டம் குறித்து கோபாலகிருஷ்ண கோகலே, டாக்டர் ராஷ் விகாரி கோஷ் முதலியோர் தெரிவித்துள்ள அபிப்பிராயங்களும் இதன்கண் தொகுக்கப்பட்டுள்ளன. இது ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டதாயினும் நல்ல நடையில் அரசாங்க விஷயங்களை இவர் தெளிவுற விளக்கியிருக்கிறார். சில செய்திகளை விளக்குமாறு நூலிறுதியில் அமைத்துள்ள குறிப்புகளும் பொருள் விளக்கத்திற்கு அவசியமாகவுள்ளன. நூல் முதலில் "இரக்கமே இந்தியாவுக்குத் தேவை" என்னும் தலைப்பில் மங்கள வசனப் பாடல் ஒன்று கலிவெண்பாவில் உள்ளது. இதில் தேசிய இயக்கத்தின் அக்கால நிலை விளக்கப்பட்டிருக்கிறது. viii. 294/1908/II.

Z44

**வெங்கடரமண ஐயர், எஸ். எஸ்., சென்னப்பட்டணம்.**

**713.** i. நீதி விவாத மஞ்சரி எனும் தமிழ் சட்ட புஸ்தகம்—1-ம் பாகம் ; ii. ஜி. ராமசுவாமி செட்டி பிரஸ், சென்னை ; iii. 1901 ; iv. உ.ப. 35+404 ; v. 22×15 செ.மீ. ; vi. 2-8-0 ; vii. 1860 வருஷத்து 45-வது ஆக்ட் இந்தியன் பீனல் கோட் 1872 வருஷத்து 1-வது ஆக்ட் இந்து தேசத்து சாட்சி சட்டம் 1864 வருஷத்து 6-வது ஆக்ட் அடி தண்டனைச் சட்டம் ஆகியவை அமைந்துள்ளன. viii. 249/1902/I.

Z44

**ஸ்ரீநிவாஸாச்சாரியார், பி. வி.**

714. i. கிராம உத்தியோகஸ்தர்கள் ஸ்பெஷல் டெஸ்ட் மானியல் : இரண்டாவது பதிப்பு ; ii. இந்தியா பிரின்டிங் வொர்க்ஸ், சென்னை ; iii. 1907 ; iv. உ. ப. 231 ; v. 22×14 செ.மீ. ; vi. 1–8–0 ; vii. கிராம உத்தியோகஸ்தர்களின் வேலை முறை, அவர்கள் கவனிக்க வேண்டிய காரியங்கள் முதலியன பற்றி விவரிப்பது. இறுதியில் பல வகைப்பட்ட நமூனுக்களும் இடம் பெற்றுள்ளன. viii. 62/1907/IV.

Z44

## 349·54 [1]—முகமதிய சட்டம்

**சுப்பிரமணிய அய்யர், ஆர்.—மொ. து.**

715. i. முகமதியன் லா ; ii. பிரிஸிடென்ஸி பிரஸ் ; iii. 1903 ; iv. உ.ப. 118 ; v. 21×14 செ.மீ. ; vi. 2–0–0 ; vii. இங்கிலீஷ் சட்டங்களிலிருந்து தமிழில் மொழி பெயர்த்து வெளியிடப் பெற்றது. viii. 288/1904/I.

Z(Q7)

# 352—இராச்சிய அரசாங்க பரிபாலனம்

## 352·2—போலீஸ் இலாக்கா

**கிருஷ்ணசாமி ஐயர், எம்.**

716. i. கிராமப் போலீஸ் என்னும் தலையாரிகளுடைய வினு-விடைப் புஸ்தகம் ; ii. ரெயித்பி அண்ட் கோ., சென்னை ; iii. 1901 ; iv. உ.ப. 151 ; v. 14×11 செ.மீ.; vi. . . . , vii. கிராமப் போலீஸ் பற்றி இவ்வாசிரியர் எழுதிய பெரு நூலின் சுருக்கம், வினு-விடை முறையில் அமைந்துள்ளது. 170 வினுவிடைகள் உள. viii. 162/1901/II.

Z,193

717. i. வில்லேஜ் போலீஸார் ; ii. ரெயித் பி அண்ட் கம்பெனி, சென்னை; iii. 1901 ; iv. உ.ப. 218+20 ; v. 22×14 செ.மீ; vi. . . . . ; vii. வில்லேஜ் போலீஸ் விதிகளும் வில்லேஜ் போலீஸ் வினு–விடையும் அமைந்துள்ளன. இந்நூல் பிறப்பதற்குண்டான எது பற்றி முகவுரையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. நூலின் இறுதியில் கிராம மாஜிஸ்டிரேட் தெரிந்துகொண்டு நடக்க வேண்டிய கற்பனைகள் தரப்பட்டுள்ளன. viii. 163/1901/II.

Z,193

## 355·54—இராணுவப் பயிற்சி

**பொன்னுசாமிபிள்ளை—மொ. து.**

718. i. 1905-ம் வருஷத்திய கம்பைண்ட் ட்ரெய்னிங் ; ii. ஏ. ஆர். மேஜர் நெதர் சோல் துரை ; ஹாம்ராக் பிரஸ், சென்னை ; iii. 1907 ; iv. உ.ப. 390 ; v. 13×11 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. போர் வீரர்களுக்குரிய நடைமுறை விதிகளும் பயிற்சி விதிகளும் பற்றி உரைப்பது. ஏழு அதிகாரங்களாகப் பாகு படுத்தப்பெற்றுள்ளது. viii. 170/1907/III.

**MV41**

719. i. இன்பன்ட்ரி ட்ரெய்னிங் ; ii. ம. கிருஷ்ணசாமி நாயுடு ; ஸ்ரீ ஹரி ப்ரஸ், சென்னை ; iii. 1904 ; iv. உ.ப. 494 ; v. 13×11 செ. மீ. ; vi. 1–8–0 ; vii. துப்பாக்கி சுடும் கலை பற்றி விவரிப்பது. பட்டாளச் சிப்பாய்களின் பயிற்சிக்கு உதவுவது. viii. 235/1904/I.

**MV41**

720. i. மஸ்கெட்ரி ரிகுலேஷன் ; ii. ஸ்ரீ ஹரி ப்ரஸ் ; iii. 1903 ; iv, உ.ப. 224 ; v. 14×11 செ.மீ. ; vi. ,. . . ; vii. 1903-ம் ஆண்டு அக்டோபர் 31-ம் தேதி வரையில் பிரசுரமான திருத்தங்கள் அடங்கியுள்ள புத்தகம்; பட்டாளச் சிப்பாய்களுக்கு உபயோகமானது. viii. 234/1904/I.

**MV41**

**யூஸுப்கான் ஸாயபு—மொ. து.**

721. i. இன்பன்டிரி ட்ரெய்னிங்—பார்ட்–I ; ii. மெமோரியல் ப்ரஸ், சென்னை ; iii.1905 ; iv. உ.ப. 63 ; v. 12×9 செ.மீ. ; vi. . . . . ; vii. பட்டாளம் சிப்பாய்களின் பயிற்சிக்காக இயற்றப்பெற்றது. viii. 92/1905/III.

**MV41**

722. i. பைனிட் பைடிங் அண்ட் பிஸிகல் ட்ரெய்னிங்: முதற் பதிப்பு ; ii. மிமோரியல் அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1907 ; iv. உ.ப. 43 ; v. 12×8 செ.மீ. ; vi. . . . . ; vii. 88-வது பட்டாளத்து ஸுபேதார் முஹம்மத் காலிப ஸாயபு துலுக்கில் மொழி பெயர்த்ததை 88-வது பட்டாளத்து 2471-ம் நெ. லான்ஸ் நாயக் யூஸுப்கான் ஸாயபால் தமிழில் பிரசுரிக்கப்பட்டது. viii. 82/1907/I.

**MV41**

## 371·3—போதனு முறை

**ஆழ்வார் அய்யங்கார், வி எஸ்.**

723. i. இண்டர் கார்டன் போதனை: முதற்பதிப்பு ; ii. காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1910 ; iv. உ.ப. 176 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இப்புத்தகம் தொடர்முறைப் போதனைக்கு ஏற்ப இயற்றப்பெற்றது. இதனுள் ஐந்து பெரும் பிரிவுகள் உள. இவ்வகைப் போதனையில் இணையக்கூடிய இயற்கை அறிவு, பலவகைப்பட்ட தொழில்கள், சித்திரம் வரைதல் முதலிய பாடங்களை நனகு விளக்குவதற்கு ஏற்ற கருவியாய் உள்ளது. பாடங்களுக்கு முதலில் தரப்பெறும் முன்னுரை பாட அமைப்புக்களை விளக்கமாகக் கூறுகின்றது. விளையாட்டிற்கு ஏற்ற இசைப் பாடல்கள் சிலவும் இதில் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. இயற்கைப் பாடங்கள் யாவும் வின்செண்டு டி. குர்ஷி என்பவர் ரூரல் பாடசாலைகளுக்கென்று எழுதிய பொருள்பாடப் புஸ்தகங்களை அனுசரித்து எழுதப்பெற்றனவாம். viii. 268/1910/I.

**T : 33**

**கிருஷ்ணசாமி அய்யர், வி. எஸ்., கயத்தாறு.**

724. i. நவீனபோதனு முறைப் பாடங்கள்; ii. விவேகபானு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1910 ; iv. உ.ப. 43; v. 17×12 செ.மீ.; vi. 0–2–0 ; vii. எலிமெண்டரி பாடசாலைகளில் பாலர் வகுப்பு, முதல் வகுப்பு மாணுக்கர்களின் உபயோகத்தின் பொருட்டு இயற்றப்பெற்றது. ஆறு கதைகள் உள்ளன. இக்கதைகளை நடத்தவேண்டிய முறை பற்றி உபாத்தியாயர்களுக்குரிய குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. பொது அறிவு, அரசியல், இயற்கைப் பாடம், கணிதம் முதலியவற்றைச் சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி பொருத்திக் காட்டிக் கற்பிக்கும் முறைகளையும் விளக்குவது. viii. 240/1910/III.

**T : 33**

**கில்லிங்ஹாம், ஸி. எல்.**

725. i. இந்திய இண்டர் கார்ட்டன் ; ii. லாங்மன்ஸ் க்ரீன் அண்ட் கம்பெனி ; லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை ; iii. 1910 ; iv. உ.ப. 118 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. போதனு முறை பயிலும் ஆசிரியருக்கும் பிறருக்கும் உபயோகமானது. இண்டர் கார்ட்டன் என்பது பாடம் கற்பித்தற்குரிய ஒரு முறையேயாகும். விளையாட்டை மையமாகக் கொண்டது இந்தப் போதனை முறை. இங்கே காட்டப்பெற்ற மாதிரிகளில் சூழ்நிலைக்கு ஏற்ற வண்ணம் ஆசிரியர்கள் பாட முறைகளை அமைத்துக்கொள்

னுதல் வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார். 23 அத்தியாயங்கள் கொண்டது இந்நூல். இந்நூலுள் அமைந்த பாடங்களின் அட்டவணையும் முதலில் தரப் பெற்றிருக்கிறது. viii. 268/1910/IV.

T : 33

**கோபால அய்யங்கார், சி., தஞ்சாவூர்.**

726. i. இந்திய கிண்டர்கார்ட்டன் போதனை முதற் பதிப்பு ; ii. மணியா அண்டு கோ., தஞ்சாவூர் ; கல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர்; iii. 1907 ; iv உ.ப. 181 ; v. 18×13 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. கிண்டர் கார்ட்டன் வகுப்புப் போதனை பற்றிய நூல். கிண்டர் கார்ட்டன் பற்றிய விளக்கமும் சித்திரம் வரைதல், குச்சி வைத்தல் முதலிய கை வேலைகள் பற்றிய விளக்கங்களும உள்ளன. குழந்தைகளுக்கு ஏற்ற கதைகளும் அவற்றைக் கற்பிக்கும் முறைகளும் கூறப்பட்டுள்ளன. viii. 122/1907/III.

T : 33

**சண்முகம் பிள்ளை, கே. பி.**

727. i. பொருட்பாடங்கள்—இரண்டாம் வகுப்பு: முதற்பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1903; iv. உ.ப. 48 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இது இரண்டாம் வகுப்பிற்கு உரியது. 20 பொருட் பாடங்கள் தரப்பட்டுள்ளன. உபாத்தியாயருக்கு வேண்டிய சில குறிப்புக்கள் முதற்கண் தரப்பட்டுள்ளன. viii. 118/1903/IV.

T : 33

728. i. பொருட் பாடங்கள்—மூன்றும் வகுப்பு : முதற் பதிப்பு ; iii. 1905 ; iv. உ.ப. 4 ; v. 18×13 செ.மீ.; vii. இது மூன்றும் வகுப்புக்காக இயற்றப் பெற்றது. 20 பாடங்கள் உள. இவற்றைக் கற்பிப்பதற்கு உதவும் சில உபாத்தியாயர்கள் குறிப்புககளும் கொடுக்கப்பெற்றுள்ளன. viii. 119/1903/IV.

T : 33

**துரைசாமி அய்யங்கார், பி. வி.**

729. i. கிண்டர் கார்டன் போதனு முறை ; ii. கணேஷா பிரஸ், சென்னை ; iii. 1909 ; iv. உ.ப. 62 ; v. 16 × 13 செ. மீ. ; vi. 0–3–0 ; vii. விளையாட்டாகக் கல்வி கற்றுக்கொடுக்கும் கிண்டர் கார்டன் முறை பற்றிய விளக்கம் தருவது இந்நூல். பிரோபெல் என்னும் பெரியாரால் ஏற்படுத்தப்பட்ட கிண்டர் கார்டன் கொடைகள் என்னும் தொழில்களையும் அவற்றின் உபயோகங்களையும் செவ்வனே விளக்கி உரைப்பது. வகுப்புக்களுக்கு ஏற்ற பொருட்பாட அட்டவணையும் சேர்க்கப்பெற்றிருக்கிறது. viii. 337/1909/IV.

T : 33

**நமச்சிவாய முதலியார், சி. ஆர்.**

730. i. பொருட்பாடங்கள்: இரண்டாம் பதிப்பு; ii. ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. 1901 ; iv. உ.ப. 8+38 ; v. 17×13 செ.மீ.; vi. 0–1–6 ; vii. பாலர் முதல் வகுப்புகளுக்காக எழுதப் பெற்ற பொருட் பாடங்கள் அமைந்துள்ளன. பொருள் வகை, பிராணி வகை, மர வகை, உலோக வகை, ஆகியவை பற்றிய 28 பாடங்களுக்குரிய குறிப்புக்கள் உள்ளன. viii. 354/1902/I.
T : 33

731. i. பொருட் பாடங்கள்; iii. 1902 ; iv. உ. ப. 50 ; vi. 0–2–0 ; vii. இரண்டாம் வகுப்புக்காகச் செய்யப்பெற்ற பொருட் பாடங்கள். பொருள் வகை, பிராணி வகை, மர வகை, உலோக வகை என்னும் நான்கு வகைப்பட்ட 20 பொருட் பாடங்கள் உள்ளன. படங்களுடன் விளக்கபெற்றுள்ளன. சி. ஆர். என். வரிசையில் 12-ம் புத்தகம். viii. 355/1902/I.
T : 33

732. i. **நவீன போதனு முறை பாடங்கள்** ; ii. வி. எஸ். கிருஷ்ண சாமி அய்யர்; விவேகபானு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1910 ; iv. உ.ப. 72 ; v. 16×13 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. அரசியல் பற்றிய சிறு நூல். எலிமெண்டரி பாடசாலைகளில் 2-வது வகுப்பு மாணவர்களின் உபயோகத்தின்பொருட்டு எழுதப்பெற்றது. உபாத்தியாயர்களுக்குரிய குறிப்புக்கள் முதற் கண் தரப்பெற்றுள்ளன. வினாவிடை முறையில் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. பாடல்களும் சிற்சில இடையே இடம் பெற்றுள்ளன. viii. 607/1910/II.
T : 33

**நெல்லையப்ப அய்யர், டி. எஸ்.**

733. i. பொருள் பாடம்—முதற் பாகம் : முதற் பதிப்பு ; ii. காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1908 ; iv. உ. ப. 34 ; v. 18×12 செ.மீ ; vi. 0–2 0 ; vii. பாலர் முதல் வகுப்புகளுக் குரியது ; 20 பாடங்கள் உள ; தக்க படங்களும் இடம் பெற் றுள்ளன. போதனு முறையில் பயிற்சி பெறுவோருக்கும் கற்பிக்கும் ஆசிரியர்களுக்கும் உபயோகமானது. viii. 219/1908/I.
T : 33

734. i. பொருள் பாடம்—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு ; iii. 1908 ; iv. உ. ப. 46; v. 18 × 13 செ. மீ. ; vii. 20 பாடங்கள் உள. பன்னிரண்டு படங்களும் இடம் பெற்றுள்ளன. பாடம் நடத்தவேண்டும் முறை முதலியன பற்றி விவரிப்பது. போதனு முறை பயிலுவோருக்கும் ஏனைய போதகாசிரியர் களுக்கும் உபயோககரமானது. viii. 220/1908/I.
T : 33

பிராண்டர் அம்மாள்

735. i. இந்திய சிசு போதன முறை ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி ; எஸ். பி. வி. கே. பிரஸ், சென்னை ; iii. 1901 ; iv. உ. ப. 123 ; v. 18 × 13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. முதல் வகுப்பிற்குரிய கதைகளும் பொருட்பாடங்களும் தொழில்களும், பாடடுகளும ஆட்டங்களும் அடங்கியுள்ளன. ஆசிரியர்களுக்கு ஏற்றதொரு வழிகாட்டி. viii. 258/1901/II.

T : 33

736. i. இந்திய சிசு போதன முறை—மூன்றும் பாகம்; iii. 1902 ; iv. உ.ப. 7+166 ; vii. இது இரண்டாம் வகுப்பிற்குரியது. கதைகளும், பொருட்பாடங்களும், தொழில்களும், பாட்டுக்களும், ஆட்டங்களும் அடங்கியுள்ளன. viii. 282/1902/I.

T : 33

ராம ராவ், எஸ்.

737. i. பொருள் பாடப் புத்தகம் ; ii. யூனியன் பிரஸ், சேலம் ; iii. 1901 ; iv. உ. ப. 46 ; v. 14 × 11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. முதல் ஸ்டாண்டர்டுக்கு உரியது. 19 மாதிரிப் பாடங்கள் உள்ளன ; அனுபந்தப் பகுதியும் உள்ளது. viii. 261/1902/I.

T : 33

## 371·73—உடற் பயிற்சி

சுப்பிரமணிய அய்யர், எல்.

738. i. பாலரெக்ஷக தேக அப்பியாச விளக்கம் : முதற் பதிப்பு ; ii. பிரண்ட்ஸ் அஸோஸியேஷன் பிரஸ், கோயமுத்தூர் ; iii. 1907 ; iv. உ.ப. 87 ; v. 19×11 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. சிறு குழந்தைகள் எளிதில் கற்றுக்கொள்ளும் உடற்பயிற்சி முறைகள் பற்றி விளக்கும் நூல். viii. 266/1907/IV.

T : 6

சுப்பிரமணிய அய்யர், கே. ஆர்., திருச்சிறுப்பள்ளி.

739. i. டிரில் அண்டு ஜிம்னாஸ்டிக்ஸ் எக்ஸர்ஸைஸஸ்—பாகம்-3 ; ii. செயிண்ட் ஜோசப் காலேஜ் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1905 ; iv. உ.ப. 94 ; v. 19×18 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. லோயர் செகண்டரி வகுப்புக்களுக்கு உபயோகமாக இயற்றப் பெற்றது. viii. 172/1905/III.

T : 6

740. i. டிரில் அண்டு ஜிம்னாஸ்டிக்ஸ்—முதற் பாகம்: நான்காம் பதிப்பு; ii. செயினட் ஜோஸப்ஸ் காலேஜ் பிரஸ், திருச்சிராப் பள்ளி; iii. 1906; iv. உ. ப. 58; v. 19×13 செ. மீ.; vi. 0-3-0; vii. மாணவர்களுக்கு உடற்பயிற்சி கற்பிப்பதற்கு உதவுவது. இதில் பிரைமரி, செகண்டரிப் பாடசாலைகளின் மாணவர்களுக்கு ஏற்ற பயிற்சிகள் அடங்கியுள்ளன. viii. 190/1906/I.

T : 6

741. i. மூன்றுவது, நான்காவது வகுப்புக்களுக்குக் கற்பிக்கும்படியான கவாத்தும் கஸரத்தும்: ஐந்தாம் பதிப்பு; ii. கே. ஆர். சுப்பிரமணிய அய்யர்; செயிண்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சிறுப்பள்ளி; iii. 1910; iv. உ.ப, 54; v. 19×13 செ.மீ.; vi. 0-4-0; vii. இது சென்னை புதிய வித்தியா சட்டத்திற்கு இணங்க அச்சிட்டுப் பிரசுரம் செய்யப் பட்டிருக்கிறது. புகைப்பட உருவங்கள் பல சேர்க்கப்பட்டிருக் கின்றன. இதில் உள்ள பயிற்சிகள் மூன்றுவது நானகாவது வகுப்புக்களுககுக் கற்பிக்கும்படியான கவாததும் கஸரத்தும் ஆகும். பயிற்றும் ஆசிரியர்களுக்கு உதவியான குறிப்புக்களும் கொடுககப்பெற்றிருக்கின்றன. viii. 656/1910/III.

T : 6

## 372·3—இயற்கைப் பாடம்

**சுவாமிநாதன், என்.**

742. i. இயற்கை அறிவு—தாவர நூல்: முதற் பதிப்பு; ii. குமாரசுவாமி நாயுடு; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1910; iv. உ.ப. 46; v. 18×13 செ.மீ.; vi. 0-4-0; vii. இயற்கையறிவு சம்பந்தமாகத் தாவர நூலும் தோட்ட வேலையும் குறிதது எலிமெண்டரி பாடசாலைகளில் கற்கும் முறைமையினை விளக்குவது. சிற்சில படங்களும் இதில் இடம் பெற்றுள்ளன. உபாததியாயர்களுக்கு உபயோகமான குறிப்புக் களும் கொடுக்கபபட்டிருக்கின்றன. viii. 389/1910/II.

LM

# 400—மொழியியல்

## 428·64—ஆங்கிலம்—தமிழ்ப் பாடப் புத்தகம்

**மார்ஸ்டன், ஈ.**

743. i. கிங் ரீடர்ஸ்—கிங் பிரிமியா; ii. மாக்மில்லன் கம்பெனி; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை; iii. 1909; iv. உ.ப. 47; v. 18×12 செ.மீ.; vi. 0-3-0; vii. ஆங்கிலமும் தமிழும் கலந்து தரப்பெற்ற நூல். ஆங்கில எழுத்து, சொல், தொடர் ஆகியவற்றைப் படிப்பதற்கு உதவியாகத் தமிழிலும் அதன் பொருள் குறிக்கப்பெற்றிருக்கிறது. viii. 364/1909/IV.

P 31,9

**வெங்கடராம ஐயர், கே.**

**744.** i. மான்யூல் ஆப் டிரான்ஸ்லேஷன் : நான்காம் பதிப்பு ; ii. ஜி. எஸ். மணியா அண்டு கோ, தஞ்சாவூர் ; கல்யாண சுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர் ; iii. 1907 ; iv. உ.ப. 143+32 ; v. 19×12 செ.மீ. ; vi. ........ ; vii. தமிழி லிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பயிற்சியளிக்கும் நூல். முதற்கண் வாக்கிய இலக்கணம் முதலியனவும் விளக்கப்பட்டுள்ளன. மொழி பெயர்ப்பில் நேரும் பொதுப் பிழைகள் குறித்து ஏழாவது அத்தியாயம் விவரிக்கிறது. இறுதி அத்தியாயத்தில் மெட்ரிக்குலேஷன் பரீட்சை, அப்பர் செகண்டரிப் பரீட்சைகளுக்குக் கொடுக்கப்பெற்ற வினாத் தாள்களும் இணைக்கப் பட்டுள்ளன. viii. 288/1907/III.

**P31,9**

## 494·8112—எழுத்து—சொல் இலக்கணம்

**குணவீர பண்டிதர்**

**745.** i. நேமிநாத மூலமும் உரையும் ; ii. ரா. இராகவையங்கார்; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை ; iii. 1903 ; iv. செ.மூ. உ.எ. 97 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. இது செந்தமிழ்ப் பிரசுரத்தில் ஆறுவது. இந்த இலக்கணம் எழுத்து, சொல் பற்றி வெண்பாவினால் அமைந்தது. தொல் காப்பியத்தை முதலாகக் கொண்டு அதன் நெறிமுறையை அடியொற்றியது. இந் நூலுரையாசிரியரைப் பற்றிய செய்திகள் தெரியவில்லை. viii. 128/1904/III.

**P31, J : 2**

**பவணந்தி முனிவர்**

**746.** i. நன்னூல் மூலமும் விருத்தியுரையும் ; ii. ஆறுமுக நாவலர், யாழ்ப்பாணத்து நல்லூர் & சதாசிவப் பிள்ளை ; வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னை ; iii. 1903 ; iv. செ.மூ.உ.ப. 328+8 ; v. 21 × 13 செ.மீ. ; vi. 1–12–0 ; vii. நன் னூலுக்குத் திருநெல்வேலி சங்கர நமச்சிவாயப் புலவரால் செய்யப்பட்டுத் திருவாவடுதுறை யாதீனத்துச் சிவஞான சுவாமி களால் திருத்தப்பட்ட விருத்தியுரை உள்ளது. ஆறுமுக நாவலர் பரிசோதித்தபடி சதாசிவப் பிள்ளையால் பதிப்பிக்கப்பெற்றது. viii. 71/1903/I.

**P31, J : 2**

**747.** i. நன்னூல் மூலம் ; ii. மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1903 ; iv. செ.மூ.எ. 462 ; v. 12×18 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. ஒவ்வொரு சூத்திரத்தின் தலைப்பிலும்

அதனதன் கருத்து தமிழிலும், இங்கிலீஷிலும் எழுதப்பட்டிருப்பதோடு, சர்வகலாசாலைப் பரீட்சைகட்கு வேண்டிய சூத்திரங்கள் இன்னின்ன என்றும் காட்டப்பட்டிருக்கின்றன. viii. 269/1903/IV.

**P31, J:2**

**748.** i. நன்னூற் காண்டிகையுரை : ஐந்தாம் பதிப்பு ; ii. கணேச அச்சுக்கூடம் ; iii. 1906 ; iv. உ.ப. 248 ; v. 22×14 செ.மீ.; vi. ......; vii. காண்டிகை உரையினை நன்கு விளக்கியும் பல விஷயங்கள் சேர்த்தும், அரிய உதாரணங்கட்குப் பொருள் எழுதியும் புதுப்பித்து எழுதப்பெற்றது. இவ்வுரையினை ஆக்கியோர், வை. மு. சடகோப ராமாநுஜாச்சாரியாரும், சே. கிருஷ்ணமாச்சாரியாரும் ஆவர். viii. 218/1906/I.

**P31, J:2**

**749.** i. நன்னூல் மூலம் [நன்னூல் மூலமும் யாப்பருங்கலக்காரிகை மூலமும்] ; ii. சுவாமிநாத பண்டிதர், யாழ்ப்பாணத்து வண்ணை நகர் ; சைவ வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னப் பட்டணம் ; iii. 1908 ; iv. செ.மூ.எ. 462 ; v. 12×8 செ.மீ.; vi. 0–2–0 ; vii. எழுத்து, சொல் பற்றிய இலக்கணங்களை வகுத்துரைப்பது ; எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என இரண்டு அதிகாரங்களாகவும், ஒவ்வொன்றும் பல இயல்களாகவும் பாகுபடுத்தப் பெற்றுள்ளன. மெட்ரிகுலேஷன், எப்.ஏ., பி.ஏ. பரீட்சைகளுக்குப் படிக்கவேண்டிய சூத்திரங்கள் அடையாளமிட்டுக் காட்டப்பட்டுள்ளன. viii. 466/1908/IV.

**P31, J:2**

## 494·8112—யாப்பிலக்கணம்

**அமிர்தசாகரர்**

750. i. யாப்பருங்கலக்காரிகை ; ii. வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னை ; iii. 1908 ; iv. செ.மூ.உ.ப. 188 ; v. 21×13 செ.மீ.; vi. 1–0–0 ; vii. யாப்பிலக்கணம் பற்றிய இந்நூல் செய்யுட்களின் இயல்புகளையும், வகைவழிகளையும் தெளிவாக விரித்துரைப்பது. இதற்கு யாழ்ப்பாணத்துச் 'சுன்னாகம்' அ. குமாரசுவாமிப் பிள்ளை இயற்றிய புத்துரை அமைந்துள்ளது. viii. 389/1908/II.

**P31, J:2**

i. யாப்பருங்கலக்காரிகை மூலம் (தொ. எ. 749 பார்க்க) ; ii. சுவாமிநாத பண்டிதர்; சைவ வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னை பட்டணம் ; iii. 1908 ; iv. செ.மூ.எ. 60 ; vii. யாப்பிலககணத்தைக் கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களால் தருவது. உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. viii. 466/1908/IV.

P31, J:2

**கலியாணசுந்தர முதலியார், பூவை.**

751. i. செய்யுளிலக்கணம், கத்தியரூபம் : இரண்டாம் பதிப்பு ; ii. கொ. லோகநாத முதலியார் ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1902 ; iv. செ.மூ.ப. 71 ; v. 21×14 செ.மீ.; vi. 0–8–0 ; vii. உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என்னும் மூன்று இயல்களில் செய்யுள் இலக்கணத்தை வசன நடையில் விவரித்து உரைப்பது. 'பாட்டியல்' பகுதியும் நூலின் இறுதியில் உள்ளது. viii. 130/1903/I.

P31, J:2

**சரவணப்பெருமாள் ஐயர், திருத்தணிகை.**

752. i. யாப்பிலக்கணம் ; ii. ஈ. ரத்னவேலு முதலியார் ; பண்டித மித்திரா பிரஸ் ; iii. 1900 ; iv. செ.மூ.எ. 67 ; v. 20×14 செ.மீ.; vi. ........; vii. யாப்பிலக்கணத்தை வினா–விடை முறையில் விளக்குவது. 67 வினா–விடைகள் உள. இது யாப்பிலக்கணம் கற்கப் புகுவார்க்கு மிகவும் உபயோகமாகும் முதல் நூல். viii. 95/1901/I.

P31, J:2

**பத்மநாப ஐயர், கோயம்புத்தூர்.**

753. i. நன்னூல் யாப்பதிகாரம் : முதற் பதிப்பு ; ii. லிட்டரரி சன் பிரஸ், கோயம்புத்தூர் ; iii. 1905 ; iv. செ.மூ.உ.ப. 111 ; v. 13×11 செ.மீ. ; vi. ........ ; vii. 69 சூத்திரங்களில் யாப்பிலக்கணம கூறுவது. சூத்திரமும் உரையுமாக இயற்றப் பெற்றது. செய்யுளிலக்கணம் கற்பார்க்கு உதவும். viii. 69/1905/I.

P31, J:2

**முத்துவீரவுபாத்தியாயர், பூஞ்சோலை.**

754. i. திருப்போரூர் முருகக் கடவுள் வெண்பா மாலை ; ii. எம்.ஒய். முருகேசம் பிள்ளை ; பண்டித மித்திர யந்திரசாலை, சென்னை ; iii. 1906 ; iv. செ.மூ.எ. 1+100+2=103 ; v. 21×14 செ.மீ. ; vi. ..........; vii. வெண்பாவின் விகற்பங்களுக்கெல்லாம் இலக்கியமாக அமைந்தது. திருப்போரூர் முருகனைக் குறித்த தோத்திரமாலையாக இது உள்ளது. viii. 328/1906/II.

P31, J:2

**விசாகப்பெருமாளையர், திருத்தணிகை.**

755. i. யாப்பிலக்கணம்; ii. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை; ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1906; iv. உ.ப. 7+46; v. 18×12 செ.மீ.; vi. 0–2–0; vii. விசாகப் பெருமாளையர் இயற்றிய இலக்கணச் சுருக்கம் நூலில் காணும் யாப்புப் பற்றிய இலக்கணம் இதில் தனிப்படப் பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது. ஆசிரியர் இயற்றிய பால போதவிலக்கணத்தில் நூதனமாகக் காணப்படும் உதாரணச் செய்யுட்களும் தக்க இடத்தில் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 101/1906/III.

P31, J:2

**வைத்தியநாத தேசிகர், திருவாரூர்.**

756. i. இலக்கண விளக்கம்: செய்யுளியல்; ii. சி. வை. தாமோதரம் பிள்ளை; வெ. நா. ஜூபிலி. அச்சுக்கூடம், சென்னை; iii. 1900; iv. செ.மூ.உ.ப. 72; v. 20×13 செ.மீ.; vi. 0–8–0; vii. ஐந்து இலக்கணமும் கூறும் பெரு நூலாகும் இலக்கண விளக்கம். இப்பொருளதிகாரத்தின் மூன்றுவதான செய்யுளியல் உரையுடன் உள்ளது. இது 1902-ம் வருடத்துப் பி. ஏ. பரீட்சைக்கு உபயோகமாக வெளியிடப்பெற்றது. viii. 204/1901/I.

P31, J:2

## 494·8112—பாட்டியல் நூல்கள்

**குணவீர பண்டிதர் முதலியோர்**

757. i. பாட்டியற் கொத்து—மூலமும் உரையும்; ii. சென்ன கேசவலு நாயுடு; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1908; iv. செ.மூ.உ.ப. 32; v. 18×13 செ.மீ.; vi. 0–6–0; vii. இதன்கண் குணவீர பண்டிதரின் வச்சணந்திமாலை, சம்பந்த மாமுனிவர் இயற்றிய வரையறுத்த பாட்டியல், பரஞ்சோதி முனிவர் இயற்றிய சிதம்பரப் பாட்டியலின் பொருத்த இயல், மரபியல், நவநீட்டரி பத்தன் என்னும் நவநீதனார் இயற்றிய நவநீதப் பாட்டியல் ஆகியவை உரையுடன் தரப்பட்டுள்ளன. viii. 157/1909/II.

P31, J:2

**குணவீர பண்டிதர்**

i. வச்சணந்திமாலை என்னும் வெண்பாப் பாட்டியல் (தொ.எ. 757 பாக்க); ii. சென்னகேசவலு நாயுடு; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1908; iv. செ.மூ.உ.ப. 56; vii. முதன் மொழியியல், செய்யுளியல், பொதுவியல் என்னும் மூன்று பகுதிகள் கொண்டது. வெண்பாவாலாகியது. இதன் உரையை இயற்றினார் இன்னார் என்பது தெரியவில்லை. viii. 157/1909/II.

P31, J:2

758. i. வெண்பாப் பாட்டியல்—மூலமும் உரையும் [வரையறுத்த பாட்டியல்] ; ii. ர. இரத்தினவேலு முதலியார் ; பண்டித மித்திர யந்திரசாலை, சென்னை ; iii. 1900 ; iv. செ.மூ.உ.எ. 23+48+31=103; v. 16×13 செ.மீ.; vi. 0-2-0 ; vii. முதன் மொழி இலக்கணமும், பிரபந்தங்களின் இலக்கணங்களும் அமைந்துள்ளன. viii. 91/1901/I.

P31, J:2

## சங்கத்துச் சான்றோர்

759. i. பன்னிரு பாட்டியல் ; ii. ரா. இராகவையங்கார் ; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை ; iii. 1904 ; iv. செ.மூ.எ. 358 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. ......; viii. 543/1908/IV.

P31.J:2

## சம்பந்த மாமுனிவர்

i. வரையறுத்த பாட்டியல் (தொ. எ. 758 பார்க்க); ii. ஈ. இரத்தினவேலு முதலியார்; பண்டித மித்திர யந்திரசாலை, சென்னை ; iii. 1900 ; iv. செ.மூ.உ.எ. 10 ; vii, செய்யுட்குரிய முதற் சொல்லை வரையறுத்து உணர்த்துவது. viii. 91/1901/I.

P31, J:2

i. வரையறுத்த பாட்டியல் (தொ. எ. 757 பார்க்க) ; ii. சென்ன கேசவுலு நாயுடு ; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1908 ; iv. செ.மூ.உ.எ. 9 ; vii. 'சம்பந்தப் பாட்டியல்' என்றும இதற்குப் பெயர் உண்டு. முதன் மொழிக்கு உரிய எழுத்துக்களை வரையறுத்துக் கூறுவது. உரையியற்றினூர் பெயர் தெரியவில்லை. viii. 157/1909/II.

P31, J:2

## நவநீதனூர்

i. நவநீதப் பாட்டியல் (தொ.எ. 757 பார்க்க) ; ii சென்னகேசவலு நாயுடு ; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1908 ; iv. செ மூ.உ.எ. 22 ; vii. முதன் மொழிப் பொருத்த இயல் பற்றிய செய்திகள் மட்டும் உள்ளன. இதன் உரையாசிரியர் பெயர் தெரியவில்லை. viii. 157/1909/II.

P31, J:2

## பரஞ்சோதி முனிவர்

i. சிதம்பரம் பாட்டியலின் பொருத்தவியல், மரபியல் (தொ. எ.757 பார்க்க); ii. சென்னகேசவலு நாயுடு ; சச்சிதானந்த அச்சியந்திர சாலை, சென்னை; iii. 1908 ; iv. செ.மூ.உ.ப. 19 ; vii பொருத்த இயல், மரபியல் பகுதிகள் உள. இது விருத்தப் பாவினாலாகியது. இதற்கு உரை இயற்றினூர் பெயர் தெரியவில்லை. viii. 157/1909/II.

P31, J:2

## 494·8112—அணியிலக்கணம்

**கபாலமூர்த்திப் பிள்ளை, மதுரகவிப் புலவர்.**

**i.** *சித்திரகவிப் புஞ்சம்* (தொ. எ. 1380 பார்க்க) ; **ii.** *வாணி நிகேதன அச்சுக்கூடம், வேலூர்* ; **iii.** 1902 ; **iv.** செ. மூ. ப. 2 ; **vii.** விநாயகர் முதலியோர் துதியாகப் பல சித்திரக்கவிகள் உள்ளன. சில பாடல்களுக்குப் பட விளக்கமும் உள்ளன. **viii.** 147/1902/I.

**P31, J:2**

**சண்முகம் பிள்ளை, அ., சோழவந்தான்.**

**760.** **i.** *மாலை மாற்று மாலை மூலம்* ; **ii.** *கந்தசாமிக் கவிராயர் ; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை* ; **iii.** 1903 ; **iv.** செ.மூ.எ. 30 ; **v.** 21 × 14 செ.மீ.; **vi.** 0–4–0 ; **vii.** ' *மாலை மாற்று* ' என்னும் சித்திரக கவி 30 கொண்டது இம்மாலை. ஆசிரியர் அறுவகைப் பகையும், அறுவகை நாடி, அன்பென்னும் நார் கொண்டு நிரல்படத் தொடுத்து ஆறுமுகக் கடவுளின் அடிமலர்க் கண்ணே அணிவித்த பிரபந்தமாகிய மாலை. நூல் முழுமைக்கும் சேற்றூர் சமஸ்தான வித்வான் விவேகபானு பத்திராதிபர் எம். ஆர். கந்தசாமிக் கவிராயர் எழுதிய உரை உள்ளது. **viii.** 111/1903/IV.

**P31, J:2**

**தண்டி**

**761.** **i.** *தண்டியலங்காரம்* ; **ii.** *அ. குமாரசுவாமிப் பிள்ளை ; வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்ன பட்டணம்* ; **iii.** 1903 ; **vi.** செ. மூ. ப. 173 ; **v.** 20 × 13 செ. மீ. ; **vi.** 1–0–0 ; **vii.** இந்நூலின் உரை சுன்னாகம் அ. குமாரசுவாமிப் பிள்ளையால் புதுக்கப் பெற்றது. அருஞ்சொற் பொருள் கோளும் ஈற்றில் உள்ளது. **viii.** 275/1903/IV.

**P31, J:2**

**விசாகப்பெருமாளையர், திருத்தணிகை.**

**762.** **i.** *அணியிலக்கணம்* ; **ii.** *எஸ். அனவரத விநாயகம் பிள்ளை ; ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை* ; **iii.** 1906 ; **iv.** உ. ப. 8+68 ; **v.** 18 × 13 செ. மீ. ; **vi.** 0–4–0 : **vii.** ' *சந்திராலோகம்* ' என்னும் வடமொழி நூலைப் பின்பற்றி எழுதப் பெற்ற நூல். உவமை முதல் ஏது ஈறாக நூறு அணிகளின் இயல்புகள் எடுத்துக் காட்டுகளுடன் விவரிக்கப்பட்டுள்ளன. பதிப்பாசிரியரின் பதிப்புரை அணி இலக்கண வரலாற்றை விளங்க அறிவிப்பதோடு விசாகப் பெருமாளையரின் வாழ்க்கையும், தமிழ்த் தொண்டும் பற்றிய குறிப்புக்களையும் தெரிவிக்கின்றது. அணி அகராதியில் அணிகளுக் குரிய வடமொழிப் பெயர்களும் தரப்பட்டுள்ளன. **viii.** 102/1906/III.

**P31, J:2**

## 494.8112—பொது இலக்கண நூல்கள்

**அரசஞ்சண்முகனார், சோழவந்தான்.**

763. i. பாயிர விருத்தி ; ii. வா. கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் ; ஸ்ரீவித்தியா விநோதனி முத்திராக்ஷரசாலை, தஞ்சை ; iii. 1905 ; iv. உ. ப. 246 ; v. 22×14 செ. மீ. ; vi. 2–0–0 ; vii. தொல்காப்பியச் சண்முக விருத்தியின் முதலாவது பகுதியாகிய பாயிர விருத்தி. தொல்காப்பியச் சிறப்புப் பாயிரப் பகுதிக்குரிய விரிவுரை. viii. 286/1905/III.

P31, J:2

**யோசேப் முன்ஷி, ஏ.**

764. i. திராவிட இலக்கிய சித்தாந்தத் தீபிகை ; ii. எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. 1902 ; iv. செ. மூ. ப. 168 ; v. 18×13 செ. மீ. ; vi. .... ... ; vii. தமிழ்ச் சொற்களின் உண்மைப் பொருள் சிதைவுறுமல் காணுதற்கு வகை யுரைப்பது. நிகண்டு சூடாமணி, குறள், நைடதம நூல்களி னின்று எடுத்துக்காட்டுகள் தந்து விளக்கப்பட்டுள்ளன. இலக்கியத்தில் உண்மைப் பொருள், விளக்கம், திராவிட எழுத்து வழுவமைதி ஐக்கியம் ஆகியவை பற்றி உரைப்பது. viii. 136/1902/IV.

P31, J:2

## 494.8113—தமிழ் அகராதி

**இரத்தினவேலு முதலியார், ஈக்காடு.**

765. i. சிறப்புப் பெயரகராதி ; ii. பண்டித மித்திர யந்திர சாலை, சென்னை ; iii. 1908 ; iv. உ. ப. 740 ; v. 22×14 செ. மீ. ; vi. ........ ; vii. தமிழ் இலக்கிய நூல்கள் முதலியவற்றி லும், இதிகாச புராணுதிகளிலும் பயின்றுள்ள சிறப்புப் பெயர் களைத் தொகுத்து விளக்கக் குறிப்புக்களுடன் ஆசிரியர் அமைத் துள்ளார். இந்நூலில் ஊர்கள், மலைகள், நாடுகள் முதலிய வற்றைப் பற்றிய விளக்கங்களும் உள்ளன. முதலில் சேர்க்காது விடுபட்ட பெயர்களைக் குறித்து அநுபந்த அகராதி ஒன்றும் ஈற்றில் உள்ளது. தமிழ் நூல்களைக் கற்பார்க்கு இது ஓர் துணை நூலாகும். viii. 249/1908/IV.

P31, J:4

**இராமநாத முதலியார், பி.**

766. i. தமிழ் பெயரகராதி ; ii. கோல்டன் பிரஸ், மதராஸ் ; iii. 1909 ; iv. உ. ப. 1000+622 ; v. 25×17 செ. மீ. ; vi. ........ ; vii. காஞ்சிபுரம் வித்வான் இராமசாமி நாயுடு

முதலிய சில வித்வான்களின் உதவியால் தொகுக்கப்பெற்றது. பெயரகராதி, பொருளகராதி என்னும் இரு பெரும் பகுதிகள் இதில் உள. முந்திய அகராதிகளை விடவும் அரிய நூல்களி லிருந்து எடுத்துச் சேர்த்த சொற்கள் இதில் பலவாம். இதில் இலக்கணப் பிரயோகம், இலக்கியப் பிரயோகம், சாஸ்திரப் பிரயோகம் முதலியன பொருந்தும் அளவாக விளக்கமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பழைய அகராதிகளில் காணப்படும் பதங்களுக்கு மேல் பதினாயிரத்து முந்நூற்று நாற்பத்தேழு புதிய பதங்கள் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 388/1909/IV.

P31, J:4

## 494.8114—நிகண்டு

**சிதம்பர கவிராயர், திருநெல்வேலி.**

767. i. உசித சூடாமணி நிகண்டு ; ii. சி. சாமிநாத பிள்ளை ; வித்தியாபாநு முத்திராசாலை, கோயமுத்தூர் ; iii. 1903 ; iv. செ.மூ.உ.எ. 192+5+131=328 ; v. 13×11 செ. மீ. ; vi. 0–6–0 ; vii. தேவ சரித்திரத் தொகுப்பு முதற் கொண்டு உதாரண வொழிவு என்ற உசிதப் பொருள் அலங்காரத் தொகுப்பு ஈறாக 18 தொகுப்புக்கள் உள்ளன. உவமானங்களை எடுத்துக் கூறுவதில் இந்நூல் இரத்தினச் சுருக்கம், உவமான சங்கிரகம் என்னும் நூல்களை விடவும் அதிகமாகக் கூறுகின்றது. viii. 101/1903/II.

P31, J:4

**மண்டல புருடர்**

768. i. சூடாமணி நிகண்டு : மூன்றும் பதிப்பு ; ii. ஆறுமுக நாவலர் அண்டு சாமிநாத பண்டிதர் ; சைவ வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னைப் பட்டணம் ; iii. 1908 ; iv. செ.மூ.உ.எ. 1196 ; v. 20×13 செ. மீ. ; vi. ........ ; vii. சூடாமணி நிகண்டின் பன்னிரு தொகுதிகளும் உரையுடன் தரப்பட்டுள்ளன. உரை அவ்வப்பாட்டின் கீழ் அமையுமாறு செய்து பதிப்பித் துள்ளார். viii. 385/1908/III.

P31, D: 4x5,1

## 494.8115—இலக்கணம்—பாடப் புத்தகம்

**சண்முகம் பிள்ளை, கே. பி.**

769. i. ஹேண்டு புக் அப் டமில்—ஜெனரல் : முதற் பதிப்பு ; (A Hand Book of Tamil) ; ii. காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1901 ; iv. உ. ப 96 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. நன்னூலின் இயல் அமைப்பு முறையில் பாகுபாடு செய்து எளிய நடையில் அமைந்த இலக்கண நூல். viii. 329/1902/I.

P31, J:2

**சுந்தரேச பாரதியார், எஸ்.**

770. i. நூதன பாலர் இலக்கணம் ; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ. ; எஸ். பி. வி. கே. பிரஸ், சென்னை ; iii. 1903 ; iv. உ. ப. 25 ; v. 19×13 செ. மீ. ; vi. . . . . . . . . . . . ; vii. எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், சொற்றொடரதிகாரம் என்னும் மூன்று பெரும் பகுதிகளில் இளைஞர்க்கு ஏற்ற வகையில் எளிய முறையில் இலக்கண விதிகளைத் தருவது ; எடுத்துக் காட்டுகளும் அப்பியாசங்களும் அமைந்துள்ளன. viii. 155/1903/IV.

**P31, J:2**

**செல்லப்ப சாஸ்திரியார், டி. வி.**

771. i. தமிழ் இளைஞர் இலக்கணம் ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு கம்பெனியார், சென்னை; ஆனந்தா ஸ்டீம் பிரஸ், சென்னை; iii. 1906 ; iv. உ. ப. 31 ; v. 18×12 செ. மீ. ; vi. 0–1–6 ; vii. பிரைமரி வகுப்புகளுக்கு உரிய சிற்றிலக்கணம். எழுத்தியல், சொல்லியல், புணரியல், சொற்றொடரியல் என்னும் நான்கு இயல்கள் உள்ளன. பயிற்சி வினாக்களும் இடையிடையே அமைந்துள்ளன. viii. 108/1906/IV.

**P31, J:2**

772. i. தமிழ் சிறுவர் இலக்கணம் ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு கோ, சென்னை ; iii. 1906 ; iv. உ. ப. 82 ; v. 18×12 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. முதல் மூன்று பாரங்கட்கு உரிய இலக்கண பாடங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. 337 விதிகளில் சுருக்கமாகக் கூறும் நூல். viii. 302/1907/I.

**P31, J:2**

773. i. தமிழ் சொற்றொடர் ஆக்கம் ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு கோ, கபாலி பிரஸ், சென்னை ; iii. 1910 ; iv. உ.ப. 206 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. இந்நூல் இக்காலத்து மாணாக்கர்கட்கு மிகவும் உபயோகமானது. ஆங்கிலத்திலுள்ள பற்பல சொற்றொடராக்கப் புத்தகங்களின் போக்கை நன்கு கவனித்து, அவற்றுள் தமிழ் மொழிக்கு ஏற்ற பொருளை மேற்கொண்டு தெளிவாக விளக்கிக் காட்டப்பெற்றிருக்கிறது. வாக்கியங்களின் அமைப்பு தொடங்கி கடிதம் எழுதுதல் ஈறாக ஏழு அத்தியாயங்களாகப் பாகுபாடு செய்யப்பெற்றிருக்கிறது. ஒவ்வோர் அத்தியாயத்திலும் முதலில் மாதிரியும் பின்பு அப்பியாசமும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 96/1910/IV.

**P31, J:2**

774. i. **தமிழ் இலக்கணச் சுருக்கம் :** முதற் புத்தகம் ; ii. கிறிஸ்டியன் லிட்ரேச்சர் சொஸைட்டி ; எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை ; iii. 1906 ; iv. உ. ப. 34 ; v. 16×11 செ. மீ. ; vi. .......... ; vii. 110 விதிகளில் தமிழ் இலக்கணத்தைச் சுருக்கமாகக் கூறுவது. அங்கங்கே அப்பியாசங்களும் அமைந்துள்ளன. viii. 30/1906/III.

**P31, J:2**

**தானியல் ஜேசுதாஸ், கரூர்.**

775. i. தமிழ் ஆசிரியன் அல்லது தமிழ் இலக்கணமும் பாஷையும் ; ii. டாக்டர் டிசில்வியாஸ் ஸ்டாண்டர்டு பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. 1901; iv. உ. ப. 248+38; v. 16×11 செ. மீ.; vi. 0-8-0; vii. 245 வினாக்களும் விடைகளுமாக இலக்கணம் அமைந்துள்ளது. பிற்சேர்க்கையாக லோயர் செகண்டரி பரீட்சைக் கேள்விகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 101/1903/III.

**P31, J:2**

**திருச்சிற்றம்பலம் பிள்ளை, .ச, கோயமுத்தூர்.**

776. i. பாலபோதினி ; ii. க. சுப்பிரமணிய முதலியார் ; வெ. நா. ஜூபிலி அச்சுக்கூடம் ; iii. 1900 ; iv. உ. ப. 84 ; v. 14×10 செ. மீ. ; vi. .......... ; vii. சொல்லதிகாரம், எழுத்ததிகாரம் என்னும் இரண்டு அதிகாரங்களில் தமிழ் மொழி இலக்கணம் சுருக்கமாகக் கூறுவது. பிரைமரிப் பாடசாலைகளின் உபயோகத்திற்காக இயற்றப்பெற்றது. viii. 11/1901/II.

**P31, J:2**

**நமச்சிவாய முதலியார், கா.**

777. i. சொற்றொடர் ஆக்கம் ; ii. வி. குமாரசாமி நாயுடு & ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1910 ; iv. உ. ப. 112 ; v. 18×11 செ. மீ. ; vi. 0–6–0 ; vii. எலிமெண்டரி, செகண்டரி பாடசாலைகளுக்கு உபயோகமாகும்படி இயற்றப் பெற்றது. வாக்கிய அமைதிகள், நிறுத்துக் குறிகள், கதை எழுதல், கதைப் பெருக்கம், விவரம் எழுதல், கடிதம் எழுதல் ஆகியவை பற்றித் தனிததனி அத்தியாயங்கள் உள. இவற்றைப் போதித்தற்குத் துணை செய்யும் குறிப்புக்கள் இறுதியில் தரப் பட்டுள்ளன. viii. 474/1910/I.

**P31, J:2**

**மகாலிங்க ஐயர்**

778. i. இலக்கணச் சுருக்கம் : இரண்டாம் பதிப்பு ; ii. சூரிய நாராயண சாஸ்திரி, சென்னை ; தாம்ஸன் கம்பெனி, மினர்வா அச்சுக்கூடம் ; iii. 1901 ; iv. உ. ப. 108 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. தமிழ் இலக்கணம் பற்றிச் சுருங்கச் சொல்லி

விளங்க வைத்தலாக உள்ளது. எழுத்து, சொல் பற்றிய இலக்கணங்களோடு யாப்புப் பற்றிய இலக்கணங்களும் உள்ளன. viii. 207/1901/II.

P31, J:2

**முத்துசாமிப் பிள்ளை, பி. எஸ். டி.**

779. i. இலக்கணப் பிரயோக விளக்கம் : முதற் பதிப்பு ; ii. கே.டி. பால்; மினர்வா ஸ்டீம் பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. 1905; iv. உ. ப. 8+107 ; v. 22× 14 செ. மீ. ; vi. 0–6–0 ; vii. இதனுள் வாக்கியச் சேதன விலக்கணம், சொல்லிலக்கணம், சொன்முடிப்பிலக்கணம், பதப் புணர்ச்சியிலக்கணம், பொருட் புணர்ச்சியிலக்கணம், பகுபத முடிபிலக்கணம், வினைவிகற்ப விலக்கணம், எழுத்திலக்கணம் முதலிய எண்வகை இலக்கணங்கள் அடங்கியிருக்கின்றன. அனுபந்தப் பகுதியில் வல்லினம் மிகுமிடங்கள் வல்லினம் மிகா இடங்கள், ரகர றகர பேதங்கள், ல, ள, ழ எழுத்துக்கள் மாறுதலால் வரும் பேதங்கள் வட மொழிப் பதங்களின் சந்தி இயல்பு ஆகியவை விளக்கப் பெற்றுள்ளன. viii. 114/1905/I.

P31, J:2

**முருகேச முதலியார், மையூர்.**

780. i. இளைஞர் இலக்கண வினு விடை : இரண்டாம் பதிப்பு ; ii. எம். எல். வி. பிரஸ், சென்னை ; iii. 1902 ; iv. உ. ப. 39 ; v. 14×10 செ. மீ.; vi. 0–1–0 ; vii. பிரைமெரி பாடசாலைகளில் கல்வி கற்கும் 3-வது, 4–வது வகுப்பு மாணவர்களுக்கு ஏற்றது. ஒரு வாக்கியத்திலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படு பொருள், பெயர்ச் சொல், வினைச்சொற்களைத் தமிழில் மிகத் தெளிவாய்ச் சிறுவர்கள் அறிந்து கொள்ளும்படி மிகச் சுலப மான நடையில் இயற்றப்பட்ட இளைஞர் இலக்கண வினுவிடை. viii. 145/1902/I.

P31, J:2

781. i. இளைஞர் இலக்கண வினு விடை : மூன்றும் பதிப்பு ; ii. மினர்வா பிரஸ், சென்னை ; iii. 1903 ; iv. உ. ப. 40 ; v. 13×10 செ மீ. ; vi. 0–1–0; vii. மூன்றுவது நான்காவது வகுப்பு மாணவர்களுக்காக இயற்றப் பெற்றது. அப்பியாசங்களும் தரப்பட்டுள்ளன. viii. 53/1903/II.

P31, J:2

**ராமஸ்வாமி அய்யங்கார், எஸ். வி.**

782. i. தமிழ் இலக்கண நூலாதாரம் ; ii. இந்தியன் பிரிண்டர்ஸ்; பிரிசிடன்ஸி பிரஸ், சென்னை ; iii. 1905 ; iv. உ. ப. 72 ; v. 18× 12 செ. மீ. ; vi. 0–3–0 ; vii. பள்ளி மாணவர்களுக்கு ஏற்ற வகையில் எழுதப்பெற்ற சிற்றிலக்கண நூல். viii. 141/1905/II.

P31, J:2

**வாசுதேவ முதலியார், பி.**

783. i. தமிழ் இலக்கணம் (The Lower Secondary Tamil Grammar with excercises); ii. வைஜயந்தி பிரஸ், சென்னை; iii. 1902; iv. உ. ப. 194; v. 16×12 செ. மீ.; vi. 0-4-0; vii. லோயர் செகண்டரிப் பாடசாலைகளின் உபயோகத்திற்காக இயற்றப் பெற்றது. எழுத்து, சொல் பற்றிய இலக்கணங்கள் எளிய முறையில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. viii. 130/1902/I.

P31, J:2

**வேங்கடசாமி ஐயர், மோசூர்.**

784. i. இரண்டாம் இலக்கணம்: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் கம்பெனி; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. 1903; iv. உ.ப. 144; v. 18×13 செ. மீ.; vi. 0-4-0; vii. அப்பர் பிரைமரி பாடசாலைகளுக்காக இயற்றப் பெற்றது. பற்பல பயிற்சிகளும் எடுத்துக் காட்டுகளும் உள்ளன. எளிய முறையில் இலக்கண பாடத்தை விளக்கி உரைப்பது. viii. 314/1903/III.

P31, J:2

785. i. தமிழ் இலக்கணம்: முதற் பதிப்பு; ii. மேக்மில்லன் கம்பெனி; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. 1906; iv. உ. ப. 256; v. 18×12 செ. மீ.; vi. ..............; vii. லோயர் செகண்டரி பாடசாலைகளின் உபயோகத்திற்காக இயற்றப் பெற்றது. எடுத்துக் காட்டுக்களின் மூலமாக இலக்கணச் செய்திகளை விளக்குவது. viii. 246/1908/I.

P31, J:2

786. i. விகுதி விளக்கம்; ii. எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. 1909; iv. உ. ப. 32; v..........; vi. 0-1-6; vii. பெயர் விகுதிகளையும் வினைச் சொற்களின் விகுதிகளையும் அகராதி வரிசையில் உதாரணங்களுடன் விளக்கும் நூல். viii. 637/1909/IV.

P 31, J:2

## 494·8118 தமிழ் கற்க உதவும் நூல்கள்

### 494·81186—பாடப் புத்தகங்கள்

**அப்துல் காதர் சாகிபு, கு. வாணியம்பாடி—தொ. து.**

787. i. ஷாகிரின் நூதன அரிச்சுவடி என்னும் முதற் பாடம்; ii. எம். அப்துல் காதர் சாயிபு; முகம்மதியா பிரஸ், வாணியம்பாடி; iii. 1910; iv. உ. ப. 80; v. 14×11 செ. மீ.; vi. 0-2-0; vii. தமிழ், அரபி, பார்ஸி, உருது வாக்கியங்கள் இதில் உள்ளன. இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து எழுத்து மொழிகளர்த்தம், நீதி மொழிகளின் அர்த்தம், இக்மின்

ஹகிம் தமது பிள்ளைகளுக்குச் செய்த நவிஹத், உருது, பார்ஸி, அரபி முறைஜாத்துக்கள் முதலியன அடங்கியுள்ளன. இதை முஸ்லீமான ஜனங்கள் ஒவ்வொருவரும் ஜேபில் வைத்துக் கொண்டு முடிவு வரையில் பார்ப்பது அவசியம் என்று முகப்பில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். viii. 476/1910/IV.

**P31,9**

788. i. **அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம்**; ii....... ; iii. 1904; iv. உ.ப. 173—270; v. 22×14 செ.மீ.; vi. .. .. ..........; vii. அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சுருக்கம், புலவர் புராணத்தில் வில்லிபுத்தூரார் பிள்ளைப் பெருமாளைய் யங்கார் சருக்கங்கள் ஆகியவற்றிற்கு உரை நூல். viii. 207/1904 /III.

**P31,9**

**அனவரத விநாயகம் பிள்ளை, எஸ்.**

789. i. தமிழ்ப் பாடப் புத்தகம்; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1910; iv. உ. ப.+செ. மு ப. 141+40; v. 18×12 செ. மீ.; vi. 0–8–0; vii. இது பள்ளிப் பிள்ளைகளுக்கான பாடப் புத்தகம். வாசக பாடத் திரட்டு என்றும், செய்யுட் பாடத் திரட்டு என்றும் இரு பகுதியாக உள்ளது. செய்யுட்களுக்கு அரும்பத உரையும் தரப் பெற்றிருக்கிறது. வசன பாடங்களில் முதல் இருபதும் ஜன விநோதினிப் பத்திரிகையைத் தழுவி எழுதியனவாகும். எஞ்சிய இறுதிப் பாடங்கள் நான்கும் தொகுப்பாசிரியர் அனவரத விநாயகம் பிள்ளையால் எழுதப்பெற்றனவாகும். viii. 782/1910/IV.

**P31, 9**

790. i. ரீடிங்ஸ் இன் தமிழ்; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1910; iv. உ. ப.+ செ. மு. ப. 124; v. 19×13 செ. மீ.; vi. 0—6—0; vii. பள்ளி மாணவர்களுக்கு ஏற்ற வாசகத்திரட்டும் செய்யுள் திரட்டும் அடங்கிய நூல். வாசக பாடங்கள் ஜன விநோதினி, மூன்றும் பால பாடம், ஓர் அணு வாசக வரிசை, கா. நமச்சிவாய முதலியார் பாடப் புத்தகங்கள், சிறந்த ஆங்கிலேயர்கள் என்னும் புத்தகங்களிலிருந்து எடுக்கப் பெற்றனவாகும். செய்யுட் பகுதியில் ஔவையார் பாடல்கள், திருக்குறள், நாலடியார், தாயுமானவர் பாடல் முதலியவற்றிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டுள்ளன. 25 வாசக பாடங்களும் 15 செய்யுட் பாடங்களும் இடம்பெற்றுள்ளன. viii. 57/1910/IV.

**P31,9**

791. i. **ஆறும் வாசக புத்தகம்**: நான்காம் பதிப்பு ; ii. கிரிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. 1907; iv. செ. மூ. உ. ப. 108; v. 19×13 செ. மீ.; vi. 0–3–0; vii. இரண்டாம் பாரத்திற்கு உரியது. 37 உரை நடைப் பாடங்கள் நளச் சக்கரவர்த்தியின் சரித்திரம் என்னும் உரை நடை நூலிலிருந்து ஒரு சிறு பகுதி சேர்க்கப்பட்டிருக்கிறது. நீதி வெண்பா, நீதி நெறி விளக்கம், அறநெறிச் சாரம் நூல்களிலிருந்து 69 பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன. viii. 258/1908/IV.

P31,9

**ஆறுமுக நாவலர்**

792. i. பால பாடம்—இரண்டாம் புத்தகம்; ii. சுவாமிநாத பண்டிதர்; சைவ வித்தியாநுபாலனயந்திரசாலை, சென்னபட்டணம்; iii. 1909; iv. உ. ப. 101; v. 17×11 செ. மீ.; vi. 0–2–0; vii. திருச்செந்தூர் சுப்பிரமணிய வித்தியாசாலையின் பொருட்டுப் பதிப்பிக்கப் பெற்றது இப் பதிப்பு. முதற் பிரிவில் வசனப் பாடங்களும் இரண்டாம் பிரிவில் ஆத்திசூடி, கொன்றைவேந்தன் ஆகியவை உரையுடனும் தரப்பட்டிருக்கின்றன. தொடக்கத்தில் நீதி வாக்கியங்கள் 82 கொடுத்துப்பின் கதைகளும், இயற்கைப் பொருள்கள்பற்றிய பாடங்களும் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. ஈற்றிலுள்ள அனுபந்தப் பகுதியில் கடிதம் எழுதுகிற முறையும், பெருக்கல் வாய்ப்பாடு, எண் மானம், பின்னவெண்கள், பொன்னிலக்கம் ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன. viii. 458/1909/III

P31,9

793. i. **இரண்டாம் வாசக புத்தகம்**: பதினேழாம் பதிப்பு; ii. கிரிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி; எஸ். பி. ஸி கே. பிரஸ், சென்னை; iii. 1908; iv. உ. ப. 87; v. 19×13 செ. மீ.; vi........; vii. இரண்டாம் வகுப்புக்கு உரியது. 55 உரைநடைப் பாடங்கள். ஆத்திசூடி, கொன்றை வேந்தன் உலக நீதி நூல்களின் சுருக்கங்கள் உள்ளன. viii. 254/1908/IV.

P31,9

**இராமாநுஜாச்சாரி, டி. என்.**

794. i. கிண்டர்கார்டன் பாட்டுக்களும் நாடகங்களும்—முதல் பாகம் ; ii. வாணி பூஷணம் பிரஸ், திருவல்லிக்கேணி; iii. 1909; iv. செ. மூ. உ. ப. 44 ; v. 20×13 செ. மீ.; vi. 0–4–0; vii. கிண்டர் கார்டன் வகுப்பிற்காகச் சில பாடல்களும், நாடகங்களும் இதில்

